# செந்தமிழ்ச் செல்வி



சிலம்பு-௫௯ திரு. வ. ஆண்டு-௨௦௧௫ ஆவணி-பரல்-௧

செப்டம்பர் 1984

# "செந்தமிழ்ச் செல்வி"

## (செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)




---

## உள்ளுறை

பக்கம்

Vol. LIX (௫௯) 1984—85

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு





ஐம்பத்தொன்பதாவது சிலம்பு

திருவள்ளுவர் ஆண்டு உ0கரு - உ0கசு



தென்னிந்திய தமிழ்ச் சங்கம்
80, பிரகாசம் சாலை (பிராட்வே),
சென்னை-600 108.

# "செந்தமிழ்ச் செல்வி"

## (செந்தமிழ்த் திங்கள் இதழ்)




நிறுவனர் : தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை

ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம்.,ஏ, பி.லிப்

# உள்ளுறை

———

# படங்கள்

பக்கம்



—



66-3


# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு-ருசு திி. வ. ஆண்டு உ0கரு, ஆவணி

செப்டம்பர் 1984




---

## 'செல்வி'யின் ஐம்பத்தொன்பதாம் ஆண்டு

சைவமும் தமிழும் தழைத்தினிது ஓங்கவும், தமிழினம் முன்னேறவும் கடந்த ஐம்பத்தெட்டாண்டுகளாகப் பணியாற்றி வந்த நம் செந்தமிழ்ச் செல்வி இப்போது தனது 59ஆம் ஆண்டில் அடியெடுத்து வைக்கின்ருள். தமிழ், கன்னித் தமிழ் என்பதாலும், என்றுமுள செந்தமிழ் என்பதாலும் அகவை 58 நிறையினும் நம் செந்தமிழ்ச் செல்வி தன் சீரிளமை குன்ருதவளாகவே இருக்கின்ருள்.

கடந்த 58 ஆண்டுகளில் செல்வி ஆற்றிவந்த அரிய பணிகள் அளப்பில. அறிஞர் பெருமக்களின் சீரிய செந்தமிழ்க் கட்டுரைகளேயும், கவிதைகளேயும் வெளியிட்டு வந்தமையோடு, தமிழ்மொழி நலமும் இன நலமும் நாடி நடுநிலே நின்று பல கருத்து வேற்றுமைகட்கும் இடந்தந்து நல்ல முடிவு காண்பதைத் தன் கடமையாகக் கொண்டிருக்கின்ருள் செந்தமிழ்ச் செல்வி.

இலங்கைத் தமிழர்களின் இன்னல்களேத் துடைப்பதற்குச் செல்வி தன்ஞலியன்ற அளவு கருத்துப் போர் தொடுத்து வந்துள்ளாள். அங்ஙனமே தமிழ்மொழி நலம் கெடுகிறது என்று அறிந்தபோதெல்லாம் தக்க தலேப்புரைகளால் ஆவன செய்து வருவதையும் அன்பர்கள் அறிவர்.

பொதுவாகச் செல்வியின் இன்றியமையாக் கடமைகள் இரண்டு. ஒன்று தமிழ் வளர்ச்சிக்கு ஆவன செய்தல்; பிறிதொன்று, தமிழுக்கு நேரும் ஊறுகளேத் தடுத்துநிறுத்தல்; நாம் எத்துணேதான் தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்டாலும், காலங்கள்தோறும் அதற்குப் புதுப்புது இன்னல்கள் புதுப்புதுப் போர்வையில் வந்துகொண்டுதானிருக்கின்றன. தனித்தமிழ் இயக்கமென ஒன்று தோன்றியிராவிடில் பண்டைத்தமிழ் இலக்கியங்கள் மக்கட்குப் புரியாத பழங்கால

மொழி என்னுமளவிற்கு உருச்சிதைந்து போயிருக்கும். ஒரு காலத்தில் வடமொழியோடு போரிட்டு அதன் மேலாண்மையைத் தடுத்து நிறுத்தினோம். இந்நாளில் அத்தகைய மேலாண்மை கலவை மொழி, மொழியியல் பயிற்சி என்ற பெயரில் புதுப்புதுப் போர்வை களில் தோன்றுகின்றன. இந் நிலையில் செல்வியின் பணி எத்துணை தேவை என்பதை நாம் விளக்கத் தேவையில்லை.

மேற்கூறிய குறிக்கோள்களுடன்தாம் 'செல்வி'யைத் தொடக்க முதல் கடந்த ஆண்டுவரை 57 ஆண்டுகளாகத் தலைமைப் பொறுப் பேற்று நடத்திய அதன் ஆசிரியர் தாமரைத் திரு. செந்தமிழ்ச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் திறம்பட நடத்திவந்தார்கள் அவர்கள் காட்டிய வழியில், வழி விலகாமல் நின்று தொடர்ந்து தொண்டாற்றுவதில் 'செல்வி' முனைப்புடன் நிற்கிறாள். அவளை ஊக்கப்படுத்தி வளர்க்கவேண்டியது தமிழன்பர்களின் கடமையாகும்.

தாள் விலை ஏற்றம் காரணமாக அதிக பக்கங்கள் வெளியிட இயலவில்லை. இந்நிலையில் ஆராய்ச்சி ஆர்வமுடைய அன்பர்கள் 'நூல்' என்னும் அளவுக்குத் தம் கட்டுரைகளை எழுதி அனுப்பி யுள்ளனர். அவற்றைத் தொடர் கட்டுரைகளாக வெளியிட்ட போதிலும், கட்டுரையாளர்களை மனநிறைவு கொள்ளச் செய்ய இயலாத வகையில் பல கட்டுரைகள் தேங்கியுள்ளன. காலம், இடம் கருத்து நோக்கி அவற்றை வெளியிட முயல்வோம் என்பதைத் தெரிவிதுக்கொள்வதோடு, கட்டுரையாளர்கள் இனியேனும் சுருங்கச் சொல்லி விளங்கவைத்தல் முறையில் எழுதி அனுப்புதல் நலமாகும் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

இந்நாளில் ஓர் இதழ் தொடர்ந்து நடைபெறுவதென்பது கடினம். இந்நிலையில் ஊதியம் கருதாமல், மொழி நலம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு இலக்கியப் பணியாற்றிவரும் செல்வி தளர்வடையாமல் தொடர்ந்து நடைபெற வேண்டுமாயின் பொருள் வசதி வேண்டும். மற்ற இதழ்களைப்போல் விளம்பரம் என்ற பெயரில் எதையாகிலும் ஏற்றுக்கொள்பவளல்லள் செந்தமிழ்ச் செல்வி. எனவே, அவ்வகையிலும் வருவாய்க்கு வாய்ப்பில்லை.

எனவே, ஆங்காங்குள்ள அன்பர்கள் செல்வியின் ஆண்டு உறுப்பினராகவும் ஆயுள் உறுப்பினராகவும் சேர்ந்து ஆதரவு தருதல் ஒன்றே உற்ற உதவியாகும்.

கடந்த ஆண்டில் தம்முடைய கருத்தோவியங்களால் செல்வியை ஒப்பனை செய்த அன்பர்கட்கெல்லாம் எமது நன்றியைத் தெரிவித்துக்கொள்வதோடு தொடர்ந்து தமது ஆதரவினை நல்கு மாறும் கேட்டுக்கொள்கிறோம்.

---

# பட்டப்படிப்பில் தமிழ்

மொழிப்பயிற்சி என்பது மக்கட்குத் தேவையான ஒன்று. இஃது இருவகைப்படும். ஒன்று தாய்மொழிப் பயிற்சி; பிறிதொன்று பிறமொழிப் பயிற்சி. பேசுதல், எழுதுதல், படித்தல் ஆகிய மூவகை முயற்சிகளின் வெளிப்பாடே மொழிப்பயிற்சி. இவற்றுள் தாய்மொழிப் பயிற்சிக்கு எழுதுதல், படித்தல், என இருவகை முயற்சிகளே தேவை. தாய்மொழியாளர்க்குப் பேச்சு இயல்பாகவே வரக்கூடியது. பிறமொழிப் பயிற்சியில் பேசவும் பழகவேண்டிய மிகை முயற்சியும் தேவைப்படுகிறது. எனவேதான் பிறமொழிப் பயிற்சி கடினமாகவும், தாய்மொழிப் பயிற்சி எளிதாகவும் தோன்றுகிறது.

இந்திமொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் அதனை மிக எளிதில் கற்று மூன்றே ஆண்டுகளில் அதில் தேர்வுபெற்று விடுகின்றனர். அவர்கள் மேலும் இரண்டு ஆண்டுகள் பயின்றால் அதில் முதுகலைப் பட்டமும் முனைவர் பட்டமுங்கூடப் பெற்றுவிடு கின்றனர். ஆனால், தமிழ்மொழிப் பயிற்சிக்கு இஃதொக்குமோ வெனில், அற்றன்று; தமிழ்மொழிக்குப் பிறமொழிகளைவிட இலக்கிய வளம் மிகுதி. அவற்றைப் பயில்வது சற்றுக் கடினமே. எனினும், பள்ளியிறுதிவரை பயின்று முடித்து, அதற்குமேலும் இரண்டாண்டுகள் மேல்நிலைப் பயிற்சி பெறுபவர்கட்குத் தமிழ் இலக்கியத்தைப் பயிற்று விக்க இயலாதா? இயலும்; அதற்கேற்பப் பாடத் திட்டங்கள் அமைதல்வேண்டும். அதனைச் செய்வது எப்படி? என்பதுதான் ஈண்டு நாம் சிந்திக்கவேண்டிய செய்தி.

அண்மையில், சென்னை இலயோலாக் கல்லூரியில் தமிழ் மொழிப் பாடம் பற்றியதொரு கருத்தரங்கம் நடைபெற்றது. அது சில புதிய சிந்தனைகட்கு இடமளித்துள்ளது. இக் கருத்தரங்கினைத் திறந்துவைத்து உரையாற்றிய தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் வ. அய். சுப்பிரமணியம் அவர்கள் கல்வித்துறையில் தமிழ் மொழிப் படிப்பிற்காக மட்டும் அரசினர் ஆண்டுதோறும் 56.75 கோடி ரூபா செலவிடுவதாகக் குறிப்பிட்டுவிட்டு, இவ்வளவு பெருஞ் செலவும் முறையாகச் செலவு செய்யப்பட்டிருப்பின் எல்லார்க்கும் மனநிறைவு ஏற்பட்டிருக்கும் என்றும் குறிப்பிட்டுள்ளார்,

எனவே, தமிழுக்கென ஒதுக்கப்படும் தொகை அதற்குரிய பலனைத் தந்ததா என்பதையும் பொருளியல் தெரிந்தோர் சிந்தித்துப் பார்த்தல்வேண்டும். ''எண்ணெய் செலவழிந்ததேயொழிய குழந்தை

பிழைக்கவில்லை'' என ஒரு பழமொழி பகர்வர். அதுபோலத் தமிழ் நிறுவனங்கள், தமிழ்த்துறை என்றெல்லாம் அமைப்புகள் வளர்ந்தனவேயன்றித் தமிழறிவு போதிய அளவு வளரவில்லை. இதற்குக் கரணியங்கள் பயிற்சிமுறையில் ஏற்பட்டிருக்கும் கருத்து வேற்றுமைகளேயெனில் மிகையன்று.

கல்லூரிகளில் தமிழ் இலக்கியப் பாடம், மொழிப்பாடம் என இரு பிரிவுகள் உள்ளன. இவற்றுள் இலக்கியப்பாடம் தேவை யற்றது; மொழி வளர்ந்தால் போதும் என்பர் ஒருசாரார். இலக்கியம் நன்கு பயிற்றப்படல் வேண்டும் என்பது பிறிதொருசாரார் கருத்து. இக் கருத்துகளெல்லாம் அக் கருத்தரங்கில் விரிவாகப் பேசப் பட்டுள்ளன.

இக் கருத்துகளில் எது ஏற்புடையது என்பதைத் தனிப்பட்ட எவரும் முடிவுசெய்தல் ஆகாது. அறிஞர் குழுவினர் கூடி முடிவு காணவேண்டிய பொருள் இது. முதுபெரும் புலவர் மு. ரா. பெருமாள் முதலியார் அவர்கள் இதுபற்றிய தம்முடைய கருத்தை ஒரு நீண்ட கட்டுரையாக வரைந்துள்ளனர். அஃது இவ்விதழில் இடம்பெறு கிறது. அதனைப் பேராசியர்கள், தமிழறிஞர்கள், மொழி யியலறிஞர்கள் ஆகியோரின் ஆய்வுக்கு விடுதலே சாலச் சிறந்த தெனக் கருதியே வெளியிடுகின்றனம்.

இலக்கியத்தைக் காட்டிலும் மொழிக்கே முதன்மை கொடுத்தல் வேண்டும் எனக் கருதுவோர், பண்டை இலக்கியங்களில் புதுமை ஏதும் இல்லை; அவற்றால் மொழி ஆக்கம்பெற வாய்ப்பில்லை என வாதிடக்கூடும். ஆனால் அதே பெருமக்கள் புத்திலக்கியங்கள் என்று எவற்றை, எத்தகையோர் இயற்றிய நூல்களைப் பயிற்சிக்குப் பரிந்துரைக்கினறனர் எனப் பார்க்கில் அவை மாணவரின் சிந்தனைக்கு வேலை தராதனவாகவும், மொழிவளம் (Richness of Language) இல்லாதனவாகவும், சுவையும் பயனுமில்லாதனவாகவும், காலப் போக்கில் தமிழ் என்ற ஒரு மொழி இருந்ததா என எண்ணும் நிலை தோன்றிடச் செய்வனவாகவுமுள்ள நூல்களையே பரிந்துரைக் கின்றனர். எனவே தமிழ் ஆக்கம் கருதுவோர் அதனை விரும்பார் என்பது ஒருதலை.

பழமை - புதுமை என்ற நோக்கில் எவரும் புதுமையை விரும்புவர் என்பதில் ஐயமில்லை ஆனால் இற்றைநாளில் எவை புதுமையெனக் கருதப்படுகின்றனவெனில், திரைப்படப் பாடல்கள் அல்லது அவற்றுக்கிணையான பாடல்கள், கிழமை - திங்கள் ஏடுகளில் வரும் சிறுகதைகள். புதினங்கள் மற்றும் படிப்போர் உள்ளங்களைக் கவர்ந்தீர்த்து, எளிதில் புரிந்துகொள்ள-சுவைக்கத்தக்க வற்றையே பாடநூல்களாக அமைக்கின்றனர். இங்கேதான் நாம்

சிந்திக்கவேண்டும். இங்ஙனம் நாட்டிலே பொதுமக்களிடையே எளிதாக நடமாடும் செய்திகளை இலக்கியக் கண்கொண்டு நோக்க, கல்லூரி வகுப்பறைகள் தேவையில்லை என்றுதானே எண்ணுவர் மாணவர்கள். இந்நிலையில் இதற்கு ஆசிரியர் பலர் தேவையா எனவும் எண்ணி அவ்வகுப்புகளை மாணவர்கள் புறக்கணிப்பார் களாயினர். இதில் வியப்பேதும் இல்லையன்றோ?

எனவே, பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம் ஆகிய கல்வி நிறுவனங்களில் மொழிப்பாடம் பயிற்றுவிப்பதில் மேலே கூறிய இருசாரார் கருத்துகட்கும், இடைப்பட்ட நிலையில் இலக்கியம் அதன் பயனை இழவாதபடியும், மொழி ஆக்கம் குன்றாவகையிலும் முட்டறுக்க வேண்டியது அறிஞர் கடன்.

பழையன யாவும் தீமை பயப்பனவல்ல, புதியன யாவையும் நன்மை பயப்பனவுமல்ல. இதைக் கருத்தில் கொண்டு பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு போன்ற நூல்களை மாணவர்கட்குப் பயிற்றுவித்தல் வேண்டும். இவ்விலக்கியங் களிடையே மாணவர்கட்கு, விருப்பில்லை ஈடுபாடு இல்லை என்றெல் லாம் சொல்லப்படுமாயின், அதற்கும் கரணியங்கள் உள.

மறைமலையடிகள், கா. சு. பிள்ளை, நாவலர் பாரதியார் போன்ற பண்டைத் தமிழறிஞர்கள் தமிழ் இலக்கியங்களைக் கற்றுத் துறை போய நல்லறிஞர்களாயிருந்தமையால், அவர்தம் நுண்மாண் நுழை புலத்தால் இலக்கியங்களைச் சுவையூட்டும் வகையில் மாணவர்கட்கு எடுத்துரைத்தனர். மாணவர்களும் அவ்விலக்கிய நயங்களை மாந்தி மகிழ்ந்தனர். ஆனால் இற்றை நாளில் அங்ஙனம் பயிற்றுவிப்பார் மிக அரியரே; பயிலுநரும் இல்லை எனலாம். வழிகாட்டி (Guides) நூல்களின் துணையினை நாடுவதில் ஆசிரியர்க்கும் மாணவர்க்கும் வேற்றுமை காணமுடியாத நிலைகளும் உள.

மேலும் ஆங்கிலத்தைப்போல் தமிழைப் பிழையின்றி எழுதும் ஆற்றல் இன்னும் நம்மவர்க்கு ஏற்படவில்லை. கசடற மொழி தலோ, எழுதுதலோ காண்பது அரிதாகிவருகிறது. இந்நிலையில் இலக்கியப் பயிற்சியை இரண்டாந்தரமாக்கிவிட்டால், அதன் விளைவு என்னாகும் என்பதையும் நாம் எண்ணிப்பார்த்தல் வேண்டும்.

கல்லூரிகளில் இலக்கியப்பாடம் வேண்டியதுதான். ஆனால் செறிவானதாக இருத்தல்வேண்டும், மாணவர்கள் எளிதில் விளங்கிக்கொள்ளக் கூடியனவற்றை அவர்களே வகுப்பறைக்கு வெளியே படிக்க விட்டுவிடலாம். அவற்றை மாணவர்கள் கண்டிப்பாய்ப் படிக்கவேண்டுமென்றிருப்பின், அவற்றில் தேர்வும் நடத்தலாம். மறைமலையடிகள், பண்டிதமணி, உ. வே. சா. நாட்டார்,

வி. கோ. சூ. போன்ற பேரறிஞர்களின் கட்டுரைகளை அல்லது நூல்களைப் பாடமாக வைக்கலாம். அவ்வாறே சங்க இலக்கியம், சிலப்பதிகாரம், கல்லாடம் போன்ற பழம்பெரு நூல்கள் ஆகிய வற்றிலிருந்து பாடல்களைத் தேர்ந்தெடுத்துச் சற்றுக் கடினமான செய்யுள் பகுதியைப் பாடமாக வைக்கலாம். இவ்வாறு மாணவர் நிலைக்குச் சற்றுக் கடினமான உரைநடை, செய்யுட் பகுதிகளைப் பாடமாக்கினால் அவர்கள் வகுப்பில் ஊன்றிக் கவனித்து நன்முறையில் படிப்பார்கள். மேலும் பழந்தமிழ் இலக்கியங்களைப் போற்றும் மனப்பாங்கும் வந்துவிடும். பட்டப்படிப்பு முடிந்தபின்பும் தாங்கள் படிக்காத பிறநூல்களையும் நூற்பகுதிகளையும் அவர்களே விரும்பிப் படிப்பர்.

இலக்கியப்பாடம் எவ்வளவு இன்றியமையாததோ அந்த அளவு மொழிப்பாடமும் தேவையே. இலக்கணப் பிழையின்றி எழுதுவ தென்பது ஒருபுறமிருக்க இன்று கல்லூரிகளில் பயிலும் மாணவர்கள் தமிழ் எழுத்துகளையே சரியாக உச்சரிப்பதில்லை. உச்சரிப்பை மாணவர்கள பள்ளிப் பருவத்திலேயே பயின்றுவிடவேண்டும். ஆசிரியர்களின் சரியான பயிற்றுவிப்பு இன்மையால் பெரும்பாலோர் இன்று தமிழ் எழுத்துகளைத் தவறாகவே உச்சரிக்கின்றனர்.

இதுதவிர மொழிப்பாடத்தின் இன்றியமையாமையை அண்மையில் நடைபெற்ற இலயோலாக் கல்லூரிக் கருத்தரங்கில் வலியுறுத்திய பேராசிரியர் டாக்டர் முத்துச்சண்முகனார் தமிழைப் பிழையின்றி எழுதவும், தமிழ்நூல்களை வேகமாகப் படிக்கும் ஆற்றல் பெறவும், மொழிபெயர்ப்புத் திறன் வளரவும், சுருக்கவும் விரிக்கவும் பயிலவும் சிக்கல்களுக்கு முடிவு காணவும் மொழிப்பாடம் தேவையென்று குறிப்பிட்டுள்ளார்.

இவையனைத்தையும் தமிழறிஞர்கள் சிந்தித்து, கல்லூரியளவில் தமிழ் இலக்கியப்பாடமும் தமிழ்மொழிப் பாடமும் எந்த அளவு இடம்பெறவேண்டும், எந்த வகையில் அமையவேண்டும் என்பன போன்ற தங்கள் கருத்துகளைச் 'செல்வி'க்கு எழுத வேண்டுகிறோம்.

—ஆசிரியர்.

---

உணர்ந்திடுக !

ஊழியஞ்செய் தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
உணர்ச்சி கொண்டே.
உணர்ந்திடுக தமிழ்த்தாய்க்கு
வருந்தீமை உனக்குவரும்
தீமை அன்றோ !

—பாரதிதாசன்.

# பட்டப் படிப்பில்
# மொழிப்பயிற்சியும் இலக்கியமும்

[பேராசிரியர் மு. ரா. பெருமாள் முதலியார்]

அண்மைக்காலம் வரையில் பட்டப்படிப்பில் தமிழ் மட்டுமன்றி ஆங்கிலப் பாடமும் மிக முக்கிய இடம்பெற்றிருந்தது. ஆங்கிலப் பாடத்தில் மொழிப் பயிற்சி மட்டுமன்றி இலக்கியப் பயிற்சியும் தரப் பட்டது. மில்டன், டென்னிசன், வோர்ட்ஸ்வொர்த் போன்ற சிறு கவிஞர் (Minor poets) நூல்களோடு ஷேக்ஸ்பியர் நாடகங்களும் கற்பிக்கப்பட்டன. பாரதநாடு விடுதலை அடைகிற வரையில் உயர் கல்வி கற்றோரின் தொகை மிகச் சிறியதாயிருந்தது. ஆங்கில மொழியில் ஈடுபாடும் திறமையும் இல்லாதோர் உயர்கல்வி கற்றல் இயலாது. ஆதலால், அப்போது பட்டப்படிப்புப் படித்தோர் ஆங்கில இலக்கியத்திலும் ஆங்கில மொழிப் பயிற்சியிலும் தேர்ச்சி பெற்றிருந் தனர். இந்த நிலை, விடுதலைக்குப்பின் பலவேறு காரணங்களால், சிறிது சிறிதாகத் தாழ்ந்துவிட்டது. ஏறத்தாழ, 1955ஆம் ஆண்டு வரையிலும் பட்டம் பெற்றோர்களுள் நூற்றுக்குச் சற்றேறக்குறைய 25 பேர் ஆங்கிலத்தில் போதுமான தேர்ச்சி பெற்றிருந்தனர். அதன் பின், நூற்றுக்குப் பத்துப்பேருக்குமேல் அத் தேர்ச்சியை அடைய வில்லை. ஆதலால், மூன்றும் வகுப்பிலிருந்து பன்னிரண்டு பதின் மூன்றுண்டு ஆங்கிலம் படித்துப் பட்டம் பெற்ற பின்னரும் பட்டதாரி களுக்கு ஆங்கில இலக்கியமும் தெரியவில்லை, ஆங்கில மொழியும் தெரியவில்லை.

பட்ட மேற்படிப்பு ஆசிரியப் பயிற்சி அளிக்கிற சைதை ஆசிரியக் கல்லூரியின் முதல்வனாய் முதல் ஐந்தாண்டு பணி புரிந்தபோதே பட்டதாரி மாணவர்களுடைய ஆங்கிலத் தேர்ச்சி மிகத் தாழ்ந்திருந்தது என்பதை நான் அறிந்துகொண்டேன். அதனால், பட்டப் படிப்பு வகுப்பில் ஆங்கில இலக்கியம் கற்பிப்பதைக் கை விட்டுவிட்டு, ஆங்கிலமொழிப் பயிற்சியைச் சிறந்தமுறையில் அளிக்கவேண்டும் என்று எடுத்துரைத்தேன். மேலும், மாணவர் தம் விருப்பப் பாடங்களை நன்கு கற்கவும், பொது அறிவு தருகிற ஆங்கில நூல்களைப் படித்துப் புரிந்துகொள்ளவும், அவ்வாறு புரிந்து கொண்ட கருத்துகளை ஆங்கிலத்தில் எடுத்துரைக்கவும் எழுதவும் அப் பயிற்சி துணை புரியும் என்றும் நான் 1960ஆம் ஆண்டிலிருந்து பேசவும் எழுதவும் தொடங்கினேன். அந்த நேரத்தில் ஆங்கிலப் பேராசிரியர்களோ பல்கலைக் கழகங்களோ என் கருத்தை மதிக்க வில்லை. ஆனால், இன்று அக் கருத்து ஏற்கப்பட்டுவிட்டது. பட்டப்

படிப்பு வகுப்பில் ஆங்கில மொழிப்பயிற்சி மட்டும் தரப்படுகிறது. ஆங்கிலத்தை விருப்பப் பாடமாய் எடுத்துக்கொண்ட மாணவர் மட்டும் ஆங்கில இலக்கியப் பயிற்சி பெறுகின்றனர்.

இப்போது, பட்டப்படிப்பு வகுப்பில் தமிழ்மொழியின் நிலையைப் பார்ப்போம். B. A, B. Sc. போன்ற பட்டப் படிப்புப் படிக்கும் மாணவர்களுக்குத் தமிழ்மொழிப் பயிற்சியோடு தமிழ் இலக்கியப் பயிற்சியும் தரப்படுகிறது. எடுத்துக்காட்டாக, சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் உரைநடைக் கோவை, தமிழ் இலக்கிய விளக்கம், காந்தளூர்ச்சாலை என்னும் உரைநடை நூல்களோடு செய்யுள் திரட்டு என்னும் நூலையும் கலையியல்—அறிவியல் பட்டப்படிப்பு மாணவர்கள் படிக்கிறார்கள். செய்யுள் திரட்டில் இராவண காவியப்பாயிரத்தி லுள்ள தமிழ்த்தாய் வாழ்த்து, இரட்சண்ய யாத்திரிகம், தமிழ்விடு தூது, தேம்பாவணி, சீறாப் புராணம், முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ், கலிங்கத்துப் பரணி, நந்திக் கலம்பகம், திருவருட்பாப் பிள்ளைச் சிறுவிண்ணப்பம், திருவாசகக் குயிற்பத்து ஆகிய பலவேறு நூல் களின் பகுதிகளும், கண்ணதாசன் எழுதிய ஆட்டனத்தி ஆதிமந்தி, முடியரசன் எழுதிய மொழியுணர்ச்சி, பாரதிதாசன் எழுதிய புரட்சிக் கவி, பாரதியார் எழுதிய கண்ணன் பாட்டில் ஒரு பகுதி ஆகிய பாடல்களும் இடம்பெற்றுள்ளன.

செய்யுட்பகுதியே பட்டப்படிப்பில் இடம்பெறலாகாது என்பது என் கருத்து. தமிழ் மாணவன் தமிழைத் தாய்மொழியாய்க் கொண் டவன். தமிழகத்தில் தெலுங்கு கன்னடம் ஆகிய மொழிகளை வீட்டில் பேசுகின்ற மாணவரும் வெளியில் தமிழில்தான் பேசுகின்றனர். அவர்கள் அனைவருமே முதல் வகுப்பிலிருந்து பன்னிரண்டாம் வகுப்பு முடியும் வரையிலும் தமிழ் பயில்கின்றனர். ஆத்திசூடி, கொன்றை வேந்தனில் தொடங்கி, நல்வழி, அறநெறிச்சாரம், நாலடியார், திருக்குறள் போன்ற நீதி நூல்களிற் சில பகுதிகளைப் பயின்று, பின்னர்ப் பெரிய புராணம், கம்பராமாயணம், வில்லிபாரதம், சீறாப் புராணம், இரட்சண்ய யாத்திரிகம், தேம்பாவணி, சிலப்பதிகாரம் போன்ற பேரிலக்கியங்கள், தேவாரம் திருவாசகம் திவ்யப்ரபந்தம் போன்ற வழிபாட்டு நூல்கள், தூது, பிள்ளைத் தமிழ், கலம்பகம், பரணி போன்ற சிற்றிலக்கியங்கள் முதலியவற்றிலிருந்து பலவேறு செய்யுள் களைக் கற்கின்றனர். 1330 குறட்பாக்களையும் பத்தாயிரத்திற்கு மேற்பட்ட கம்பராமாயணச் செய்யுள்களையும் கல்வி நிலையத்திலேயே கற்றுக்கொடுக்கவேண்டிய தேவையில்லை. அவ்வாறு செய்தலும் இயலாது. அந்நூல்களிற் சில நூறு பாடல்களையும், அதுபோலவே பிற நூல்களில் சிற்சில பகுதிகளையும் கற்றுத் தந்தால் போதும். அவற்றைக் கற்கும்போதே மாணவரின் இலக்கியச் சுவை நுகர்திறன்

வளரும். தமக்குப் பிடித்த நூல்களை மேலும் மேலும் பயிலவேண்டும் என்னும் ஆர்வமும் வளரும். அனைத்து மாணவர்களும் சுவைநுகர் திறனையும் ஆர்வத்தையும் வளர்த்துக்கொள்ளாவிட்டாலும், சில ரேனும் அவ் வளர்ச்சியை அடைவர். பன்னிரண்டாம் வகுப்பை முடிப்பதற்குள் அத் திறனையும் ஆர்வத்தையும் வளர்த்துக்கொள்ளா தோர் பின்னர் அவற்றை வளர்ப்பர் என்று கருத இயலாது. ஆதலால், பட்டப்படிப்பில் தமிழிலக்கியம் கற்பிக்கவேண்டிய தேவையில்லை.

செய்யுள் சுவைநுகர் திறனும் படித்து மகிழவேண்டும் என்னும் ஆர்வமும்பெற்ற மாணவர்கள் பன்னிரண்டாம் வகுப்பு முடித்த பின்னர்த் தாங்களாகவே சிறந்த நூல்களைப் படித்துக்கொள்ளலாம். பேரிலக்கியங்களுக்கும் சிற்றிலக்கியங்கள் பலவற்றுக்கும் அறிஞர் எழுதிய உரைநூல்கள் இருக்கின்றன. அத்தகைய உரைகளின் துணையோடு பல நூல்களையும் பயின்று மகிழ்வது அரிதன்று. இவ்வுண்மைக்கு நானே ஓர் எடுத்துக்காட்டு. கல்வி நிலையத்தில் நான் இடைநிலை (Intermediate) வகுப்பு வரையில்தான் தமிழ் பயின்றேன். பின்னர், நானே முயன்று, ஆசிரியர் துணையேது மின்றி, பலவேறு வகைப்பட்ட இலக்கிய நூல்களைப் படித்து மகிழ்ந்தேன். இப்போதும் படிக்கிறேன். நான் திருக்குறள் படித்த முறை சுவையானது. திருக்குறள் மூலத்தையும், பரிமேலழகர் உரையையும், திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு ஒன்றையும் வைத்துக்கொண்டு திருக்குறளை நன்கு படித்தேன். பலவேறு நூல்களிலிருந்தும் பல நூறு பாடல்களை மனப்பாடம் செய்துள்ளேன். அவற்றைச் சுவையாய் எடுத்துரைக்கும் ஆற்றலும் பெற்றுள்ளேன்.

மேலும், பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், முடியரசன் முதலியோர் எழுதியுள்ள பாடல்களைப் பன்னிரண்டாம் வகுப்பு முடித்த மாணவர்தாமே படித்துச் சுவைக்க இயலும். எடுத்துக் காட்டாக,

"அன்னப்பூம் பாவாய்! தேன் அமுதக் காற்றே!
 அழியாத புகழ் பெற்றான் சோணாட் டேந்தல்!
சின்னப்பூ விதழாளே! கோவில் முன்னே
 சிற்றாடை காற்றாடப் பூப்போல் ஆடி
என்னைப்போல் இளையோரின் மனத்தைக் கொண்டாய்;
 இந்நாடே நின்பாதச் சேவை செய்யும்!
பொன்னிப்பூங் கரையோரம் திரிவாய்! இந்தப்
 புவிபோற்றும் கருவூரில் வளர்வாய்"

என்னும் கண்ணதாசன் பாட்டுக்கோ,

''ஆங்கிலமோ பிறமொழியோ பயின்று விட்டால்
அன்னைமொழி பேசுதற்கு நாணு கின்ற
தீங்குடைய மனப்போக்கர் வாழும் நாட்டில்
தென்படுமோ மொழியுணர்ச்சி? ஆட்சி மன்றில்
பாங்குடன்வீற் றிருக்குமொழி தமிழே யென்று
பகர்நாளில் மொழியுணர்ச்சி தானே தோன்றும்;
ஈங்கதற்கா யென்செய்யப் போகின் றீர்நீர்?
இளைஞரணி விழித்தெழுந்தால் விடிவு தோன்றும்''

என்னும் முடியரசன் பாடலுக்கோ பன்னிரண்டாம் வகுப்பு முடித்து விட்டுப் பட்டப்படிப்புப் படிக்கும் மாணவனுக்கு M. A., M. Lit., M. Phil., Ph.D. போன்ற பட்டங்களைப்பெற்ற தமிழாசிரியர்கள் பொருள்கூறி விளக்கம் தரவேண்டியதில்லை. மாணவன் ஓய்வு நேரத்தில் தானே படித்து மகிழவேண்டிய பாடல்கள் அவை. இக்கூற்று பிள்ளைச் சிறு விண்ணப்பம், கண்ணன் பாட்டு, புரட்சிக் கவி முதலிய பாடல்களுக்கும் பொருந்தும். எனவே, பட்டப்படிப்பு வகுப்பில் மாணவர் இலக்கியப் பயிற்சியில் செலவிடுகிற நேரத்தைத் தம் விருப்பப் பாடங்களில் செலவிட்டால் அவற்றில் சிறந்த தேர்ச்சி பெறுவர். தமிழை விருப்பப்பாடமாய் எடுத்துக்கொள்ளும் மாணவர் மட்டும் இலக்கியப் பயிற்சி பெற்றால் போதும்.

இந்தச் சீர்திருத்தம் தமிழாசிரியரிடையில் வேலையில்லாத் திண்டாட்டத்தை ஏற்படுத்தக்கூடும் என்று சிலர் கருதலாம். ஆங்கிலப் பாடத்தில் சீர்திருத்தம் செய்தபோது அந்தச் சிக்கலை எவ்வாறு தீர்த்தோமோ அவ்வாறே இப்போதும் தீர்த்து விடலாம்.

இப்போது பட்டப்படிப்பு வகுப்பில் எத்தகைய தமிழ்ப் பயிற்சி தேவை என்பதைப் பார்ப்போம்.

பட்டப்படிப்பில் மாணவர்க்குச் சிறந்த உரைநடை எழுதும் பயிற்சி தரவேண்டும். இயன்ற வரையில் பிறமொழிக் கலப்பைத் தவிர்த்து, எடுத்துக்கொண்ட பொருளைப் பாகுபடுத்தி, பலவேறு பிரிவுகளையும் தர்க்க முறைப்படி ஒன்றன்பின் ஒன்றாய் அமைத்து, படிப்போர்க்கு ஐயம் சிறிதும் ஏற்படாத வகையில் தெளிவாக எழுதப் பெறுகிற நடையே நல்ல உரைநடையாகும். மேலும், இலக்கியச் சொற்களையே இயன்றவரையில் தெரிந்தெடுத்துப் பயன்படுத்த வேண்டும். அன்றியும், பொருத்தமான மேற்கோள்களைக் கையாள வேண்டும். அப்போதுதான் உரைநடை அழகுமிக்க இலக்கிய நடையாயிருக்கும்.

இந்தக் காலத்தில் அறிவியல் துறையிலும் தொழில் நுட்பத் துறையிலும் புதிய கண்டுபிடிப்புகள் வந்துகொண்டே இருக்கின்றன. அதனுல், புதுப்புது வாழ்க்கை வசதிகள் பெருகிக்கொண்டே போகின்றன. அந்தத் துறைகளில் பல செய்திகளை மக்கள் தெரிந்து கொள்வது தேவையாகிறது. அறிவியல் தொழில் நுட்பப் பாடங்களை நாம் இன்று ஆங்கிலத்தில் படிக்கின்ருேம். அவற்றுள் நாம் முதன்மையாய்க் கருதும் பொருள்களைப்பற்றித் தமிழ்மொழியில் எழுதுவதற்குப் பட்டப் படிப்பு மாணவர்கள் பயில வேண்டும். அன்றியும், சிறந்த அறிவியல் தொழில் நுட்ப நூல்களையும் கட்டுரை களையும் ஆங்கிலத்திலிருந்து தமிழில் பெயர்த்தெழுதுவதற்கேற்ற மொழிபெயர்ப்புப் பயிற்சியை மாணவர் பெறவேண்டும். சுருங்கச் சொன்னுல், மாணவர் தாந்தாம் தெரிந்தெடுத்துக் கொண்ட விருப்பப் பாடப் பொருள்கள்பற்றிக் கட்டுரைகளை எழுதவும், அவற்றை மொழி பெயர்க்கவும் பயிற்சி பெற வேண்டும். இந்தப் பணியில் அவர்கள் இயன்றவரையில் தமிழ்க் கலைச்சொற்களைப் பயன்படுத்த வேண்டும். அவ்வாறு செய்ய இயலாதபோது, ஆங்கிலக் கலைச் சொற்களைக் கையாளலாம். அதுவே படிப்போர்க் குத் தெளிவு ஏற்பட உதவும்.

தமிழ் இலக்கிய விளக்கம், உரைநடைக்கோவை ஆகிய இரு நூல்களும் பாட நூல்களாயிருக்கின்றன என்று மேலே சொன் னேன். இலக்கிய விளக்கம் இலக்கியக் கட்டுரைகளை எழுதுவதற் கும் உரைநடைக் கோவை பலவகைப்பட்ட பொருள்களைப்பற்றிய கட்டுரைகளை எழுதுவதற்கும் மாணவர்க்கு வழி காட்டும்.

நான் கல்லூரியில் படிப்பதற்குத் தெரிந்தெடுத்த விருப்பப் பாடத் துறையில் (B. A. Hons. வகுப்பில்) வரலாறு, பொருளா தாரம், அரசியல் ஆகிய பிரிவுகள் இருந்தன. அவற்றுள் எந்த நூலையும் எந்தக் கட்டுரையையும் மொழி பெயர்க்கும் ஆற்றலை நான் வளர்த்துள்ளேன். மேலும், பொது அறிவு நூல்களையும் கட்டுரைகளையும் நன்ருய் மொழி பெயர்ப்பேன். நான் மொழி பெயர்த்துள்ள ''தென்னிந்திய வரலாறு'' போன்ற நூல்களும், உலக மொழிகள் இருபதில் வெளிவருகின்ற யுனெஸ்கோக் கூரியர் என்னும் மாதவிதழின் தமிழ்ப் பதிப்பில் இடம்பெற்றுள்ள என் மொழி பெயர்ப்புக் கட்டுரை சில நூறும் நல்ல மொழி பெயர்ப்புக்கு எடுத்துக்காட்டுகள் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள் கிறேன். இத் திறனை எத்தனை மாணவர்கள் பெற இயலுமோ அத்தனை பேரும் பெறுதல் இன்றைய நிலையில் இன்றியமையாதது.

இப்போது தன்னுட்சியுரிமை பெற்ற கல்லூரிகள் சில இருக் கின்றன. எடுத்துக்காட்டாக, சென்னை தனியார் கல்லூரி ஒன்றைச்

சொல்லலாம். அந்தக் கல்லூரியில் பாடத் திட்டத்தை வகுத்துக் கொள்ளும் உரிமை கல்லூரிப் பேராசிரியர்களுக்கே உரியது. ஆதலால், தமிழ்ப் பாடத்திட்டம் சிறந்த முறையில் வகுக்கப்பட்டிருக்கும் என்றும், அந்தக் கல்லூரியில் பட்டப் படிப்பு முடித்து வெளியேறும் மாணவர்கள் சிறந்த தமிழ்மொழிப் பயிற்சி உடையவர்களாய் இருப்பார்கள் என்றும் எதிர் பார்ப்பதற்கு நமக்கு உரிமையுண்டு. மொழிப்பயிற்சி உயர்தரமாய் இருக்க வேண்டுமானால், பாட நூல்கள் சிறந்தவையாய் இருக்க வேண்டும்.

அந்தத் தன்னாட்சிக் கல்லூரியில் பட்டப்படிப்பு முதற் பருவத்திற்கு வைக்கப்பட்டுள்ள தமிழ்ப் பாட நூல்கள் நான்கு. அவற்றுள் ஒன்று 'ஐயை' என்னும் செய்யுள் நூல். அது தூய தமிழில் மிக நன்றாய் எழுதப்பட்டுள்ளது.

இரண்டு, மு. கருணாநிதி எழுதிய சிறுகதைத் தொகுப்பு. அதில் ''தப்பவில்லை'' என்னும் ஒரு கதையை மட்டும் படித்துப் பார்த்தேன். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம். கதை நன்றாயிருக்கிறது. கதையின் முடிவு எதிர்பாராததாய் இருப்பது கருணாநிதியின் திறமைக்கு நல்ல எடுத்துக்காட்டு. ஆனால், போலீசார், அப்பீல், கித்தாப்பு, காராக்கிரகம், இலட்சணவதி, உபத்திரவம், நிச்சயார்த்தம், சகிக்க, சுலபமானது, பிரசங்கம், ஆரம்பி முதலிய பிறமொழிச் சொற்கள் உள்ளன. அவை உரையாடலில் வந்தவையல்ல. ஆசிரியரின் கூற்றாக வந்துள்ளன. அன்றியும், ''ஏங்கவோ அல்லது இன்பம் அடையவோ'' என்னும் தொடரில் இலக்கணப்படி ''அல்லது'' தேவையில்லை. ''இன்னும் சிறையில்தான் இருக்கிறோம் என்பதை உணர்கிறான்'' என்பது பிழை. மாறாக, ''தான் இன்னும் சிறையிலேதான் இருக்கிறான் என்பதை உணர்கிறான்'' என்று எழுதவேண்டும். மேலும் ''சுருட்டு செய்யும்'' ''முத்துவுக்கு'' என்பன பிழைகள், ''சுருட்டுச் செய்யும்'' என்றும் ''முத்துக்கு'' என்றும் எழுதவேண்டும். பட்டப் படிப்புத் துணைப்பாட நூலில் இத்தகைய பிழைகள் இருக்கலாமா?

மூன்று, கோவி. மணிசேகரன் எழுதிய ''முதல் உரிமைப் புரட்சி'' என்னும் வரலாற்றுப் புதினம். ஆசிரியருக்குத் தமிழ்ப் புலமை உண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், இலக்கணப் பிழைகள் பல இந்த நூலில் இருக்கின்றன. முன்னுரையோடு சேர்த்து 32 பக்கங்களை மட்டும் படித்தேன். ''நம்மவர்தாம் ஜால்ராக் காரர்கள் ஆயிற்றே''. ''சற்று பெரிய'', ''வேலூர் கோட்டை'', ''அதுகளுக்கே'' முதலிய இலக்கணப் பிழைகளும், வரண்டு, மதத்த முதலிய எழுத்துப் பிழைகளும், சோல்ஜர்கள், மிருக பாஷைகள் போன்ற பிறமொழிச் சொற்களும் இருக்கின்றன. இத்தகைய

பிழைகளையுடைய நூலைப் பட்டப்பாடவகுப்பில் துணைப்பாட நூலாக வைப்பது தவறு.

அன்றியும், இந்தப் புதினத்தையும் கருணாநிதியின் கதைகளையும் மாணவர் தாமே படித்துக்கொள்ளலாம். கல்லூரியாசிரியர்கள் துணை தேவையில்லை. அவற்றைப் படிப்பதால், கிடைத்தற்கரிய கல்லூரி நேரம் பாழாகும்.

நான்கு, எம். எஸ். உதயமூர்த்தி எழுதிய ''பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எப்படி?'' என்னும் நூல். இது பாட நூலா-துணைப்பாட நூலா-என்பது தெரியவில்லை. எதுவாயினும், இந்த நூலின் தமிழ் நடை மிகவும் பிழையுடையது. இது பட்டப்படிப்பு வகுப்பில் ஆசிரியர் கற்றுக் கொடுத்து மாணவர் பயில்வதற்கேற்ற நூல் அன்று. ''முடிவெடுப்பது'' என்னும் சொற்றொடர் பலப்பல இடங்களில் வருகிறது. To take a decision என்னும் ஆங்கிலத் தொடரின் மொழி பெயர்ப்பு இது. தமிழில் ''முடிவு செய்தல்'' என்பதே பொருத்தமானது. ''துணி வெய்தல்'' என்னும் வள்ளுவர் கூற்று இந்த இடத்தில் மிகவுயர்ந்த இலக்கியச் சொல்லாய் இருக்கும்.

உதய மூர்த்தியின் நூலிற் சொல்லப்பட்டுள்ள கருத்துகள் நமது கவனத்தை ஈர்க்கும் தன்மையுடையவை. ஆனால், அவர் எழுதும் தமிழ் நடை மிகவும் பிழையுடையது. தமிழில் எழுதுவதற்கு அவர் ஒரு தமிழர் என்பதன்றி வேறு தகுதியில்லை. நூலின் முன்னுரையையும் முதலிரண்டு அதிகாரங்களையும் மட்டும் படித்தேன். அதற்குள்ளாகவே, விவசாயி, சம்பந்தமான, காரியதரிசி, பூர்ணத்துவம் போன்ற வட சொற்களும், ஹோட்டல், டயரி, பீச்சு, ரிட்டையர் போன்ற ஆங்கிலச் சொற்களும், கோர்க்க என்னும் எழுத்துப் பிழையும், எல்லா கோணங்கள் என்பது போன்ற சந்திப் பிழைகளும், ''போதுமான தகவல்கள் இல்லாதபோது, அதை வைத்துக்கொண்டு முடிவெடுக்கக் கூடாது'' என்பது போன்ற இலக்கணப் பிழைகளும் இடம்பெற்றிருப்பதைக் கண்டேன்.

நாட்டாரும், மறைமலையடிகளும், திரு. வி. க. வும் எழுதிய உரை நடையைப் படித்துவிட்டு, மேலே கண்ட பிழை மலிந்த உரை நடையைப் படிப்பது போன்ற தண்டனை ''நற்றமிழனுக்கு''க் கிடைக்கக் கூடாது. மேலும் பட்டப்படிப்பு வகுப்பில் பாட நூலாகும் தகுதி இத்தகைய நூல்களுக்குண்டா?

இவற்றையெல்லாம் தெரிந்துகொண்டபின், தன்னாட்சியுரிமை பெற்ற கல்லூரிகளில் தமிழ்த்துறை தக்க முறையில் செயல்படுகிறதா என்று ஆராய்ந்து பார்த்தல் நல்லது என்பது என் கருத்து.

# பற்று

[கழக இலக்கியச் செம்மல்,
புலவர் இரா. இளங்குமரன்]

பல் + து = பற்று. பல்லால் இறுக்கிப் பிடித்தல். புற்றுதல் எனப்பட்டது. கொல் + து = கொற்று; புல் + து = புற்று என்பவை எண்ணத்தக்கன.

பற்பிடிப்பாலும் பற்கடிப்பாலும் அமைந்த பற்று என்னும் சொல், ஒரு பெரிய, தாய்; அவள் பெற்ற பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும் மிகப் பலர், அவள் இன்னும் பெற்றுப் பெருவாழ்வு கொள்ளும் பேரரசியாகவே விளங்கிவருகிறுள்; மேலும் விளங்கியும் வருவாள்.

உடும்பைப் பிடித்து அதன் வாலை வாய்க்குள் தந்துவிட்டால் விடாமல் பற்றிக்கொண்டு ஒரு வளையம்போல் கிடக்கும். அப்படிக் கிடக்கும் பல உடும்புகளை ஒரு கோலில் போட்டுத் தூக்கிக்கொண்டு வருதல் வேட்டைக்காரர் வழக்கம்.

தன் சிறுவடிவுக்கு ஒவ்வாத பெரும் பல்லுடைமையால் பெயர் பெற்றது பல்லி; பல் நீண்டவரைப் பல்லன், பல்லாயி என வழங்குவது இல்லையா!

14-7-'78 இல் இரவு 7.55-க்கு இரண்டு பல்லிகள் போரிடத் தொடங்கின! அவற்றின் போர் மூன்ரும் பல்லி ஒன்றன் முனைந்த தாக்குதலால் 9.25-க்கு வெற்றி தோல்வியின்றி முடிந்தது! பல்லியின் பற்போர் எருதுப்போர், கடாப்போர், சேவற்போர் ஆயவற்றுக்குச் சற்றும் இளைத்ததன்று.

புலி முதலிய கொடுவிலங்குகள் பற்றுதலும் அலைத்தலும் தொலைத்தலும் செய்ய வாய்த்த கருவி 'பல்'தானே! பல் இல்லையேல் பற்றுதல் ஏது? பற்றின் மூலம் 'பல்' என்பதை இவையெலாம் விளக்கும்! அம்மட்டோ, நாயும் பூனையும் குட்டிகளை வாயால் பற்றிக் கொண்டு செல்லுதலைப் பாரார் எவர்? மாந்தரும் பல்லால் பற்றுதலும் இழுத்தலும் கடித்தலும் பிடுங்குதலும் விலங்குபோலக் கடித்துக் குதறுதலும் இல்லையா!

பல்லால் பிடித்தலே 'பற்ருய்' இருந்து பின்னே, இறுக்கிப் பிடிப்பவை எல்லாம் பற்ருய்ப் பொருள் விரிவாயிற்று.

அடுகலத்தில் (சமையற்கலத்தில்) ஒட்டிக்கிடக்கும் பிடிப்புக்கும் 'பற்று' என்பது பெயர். அது வெப்பத்தால் வண்ணம் மாறிக், கரு நிறமாய் இருத்தலால் கரிப்பற்று என்றும் கருப்பற்று என்றும் (பற்று, பத்தாக) வழங்குகின்றது. வளமிக்க வாழ்வினர் 'பற்றுத்தேய்ப்புக்' கென வேலையாள் வைத்திருத்தல் நடைமுறை. பற்று, கையால் தேய்த்து அகற்ற இயலாமல் இறுகிக்கிடத்தலால் அதனைச் 'சுரண்டி' எடுக்கத் தகடும் சிப்பியும் உண்டு. அத் தகடும் சிப்பியும் 'பற்றகற்றி' என வழங்கப்படும். 'சுரண்டி' என்பதும் அதற்கொரு பெயர் அதனின் வேறுபடுத்துதற்காகக், களைவெட்டும் கருவியைக் 'களைசுரண்டி' என்பர். பற்றிக்கிடக்கும் களையைச் சுரண்டி எடுப்பது தானே களை சுரண்டி. 'பற்றை' என்பது களைகளுக்கும் சிறுதூறு களுக்கும் பெயர் என்பதும் எண்ணத்தக்கது. நீர் கட்டிக் கிடத்தலால் உண்டாகும் வழுக்கல் பாசிக்குப் 'பற்று' என்னும் பெயருண்மையும் கருதலாம்.

தலைவலி, பல்வலி முதலிய வலிகளுக்கும் அடிபட்ட வீக்கம் அதைப்பு முதலியவற்றுக்கும் 'பற்றுப்போடுதல்' பண்டுவ முறை. பச்சிலை முதலியவற்றை அரைத்து அப்பிவைத்தலே 'பற்றுப் போடுதல்' என்பது சரிதானே! ''பாய்ச்சல் காட்றியே என்ன? பற்றுப் போடணுமா?'' என்பது வழங்குமொழி.

குளம், கிணறு, கால்வாய், ஆறு முதலிய நீர்நிலைகளை அடுத் திருக்கும் நிலம் வளமிக்கது; வாளிப்பாகப் பயிரை வளர்த்து வளம் செய்வது. இவற்றைப் பற்றிய நிலம், 'பற்று' என வழங்கப்பெறும். முறையே குளத்துப்பற்று, கிணற்றுப்பற்று, கால்வாய்ப்பற்று, ஆற்றுப்பற்று என்று சொல்லப்படும். 'பற்று' என்பதே 'நன்செய்'! ''நீரருகே சேர்ந்த நிலம்'' என்பர்; ''நிலத்துக்கு அணியென்ப நெல்லும் கரும்பும்'' என்பர்; நிலம் என்பதே நன்செய்யைக் குறிக்கும் என்பதை 'நன்செய் புன்செய்' என்பவற்றைச் சுட்டும், 'நிலபுலம்' என்னும் இணைமொழியால் இனிதுணரலாம்.

நன்செய் நிலத்திற்கு அல்லது மருதநிலத்திற்கு உரிய 'பற்று' என்னும் பெயர், அந்நிலத்து அமைந்த ஊர்க்கும் பெயராக வழங்க லாயிற்று. 'பற்று' என்பது வீடுகள் நெருங்க நெருங்க அமைந்த மருதநிலச் சிற்றூராம். 'பற்று' என்பது 'பத்து' என்றும் 'பட்டு' என்றும் பின்னே திரிந்து வழங்கலாயிற்று.

மதுரையை அடுத்த 'அச்சன்பற்று', 'அச்சம்பத்'தாகவும், 'பிராட்டிபற்று', 'விராட்டிபத்'தாகவும் வழங்குதல் 'பற்று', 'பத்து' ஆயதற்குச் சான்று. 'செங்கழுநீர்ப்பற்று', 'செங்கழுநீர்ப்பட்'டாய் மாறிச் 'செங்கற்பட்'டாய்ச் சிதைந்தது, 'பற்று' 'பட்டு' ஆயதற்குச் சான்று.

சித்தூர் நாட்டுப் பூத்தலைப் பற்றும், ஆர்க்காட்டுத் தெள்ளாற்றுப் பற்றும் முறையே பூதலப்பட்டாகவும் தெள்ளாரப்பட்டாகவும் மருவி வழங்குவதைத், ''தமிழகம், ஊரும் பேரும்'' சான்றுடன் உரைக்கும். (பக். 26, 27)

அரத்த ( இரத்த)த் தொடர்புடைய குடிவழியினரை 'ஒட்டுப் பற்று' என்பதும், அத் தொடர்புடைய கூட்டத்தைப் 'பற்றுயம்' என்பதும் அத்தகு வாய்ப்பில்லானை ஒட்டுப்பற்று இல்லாதவன்' என்பதும் நாடறிந்த செய்தி.

அன்பு கொண்டு ஆரத்தழுவி நட்புற்று இருப்பாரைப் 'பற்றுளர்' என்பதும், அத்தகையர் இல்லாரைப் பற்றிலி' என்பதும், பகைவரைப் 'பற்ருர்', 'பற்றலர்' என்பதும் இலக்கிய வழக்குகள். முன்ன தொன்றும் உலகியல் பெருவழக்கமாம். மதிலைமுற்றிவிடாது இருத்தலைப் 'பற்றுற்றல், என்பது புறப்பொருள் இலக்கணக் குறியாம்.

கோல் காலாகக் கொள்வார்க்கு உதவும் ஊன்றுகோல், 'பற்றுக்கோல்' எனப்படும். கொல்லுலைக் களத்தில் பற்றி எடுக்க உதவும் கருவி, 'பற்றிரும்பு', 'பற்றுக்குறடு', பற்றுக்கோல்' என வழங்கும். இரண்டு இரும்புத்துண்டங்களை ஒன்றுய் இணைத்தற்கு அவற்றின் இடையே ஒருசிறு துண்டு இரும்புவைத்துப் பொடிதூவித் தட்டி இணைப்பது வழக்கம். அதற்குப் 'பற்றுசு' என்பது தொழின் முறைப் பெயர். 'ஆசிடை எதுகை'யைப் 'பற்றுசு' என்பதை எடுத்துக்காட்டி விளக்குவது இலக்கண நூன்முறை.

'பற்றிருப்பு' என்பது 'அள்ளு' என்னும் பொருளையும் தரும். அள்ளாவது, கதவை மூடிச் சாத்துதற்கு உதவும் கம்பியையும் தாழ்ப்பாளையும் மாட்டி வைக்கும் கொண்டியாம். பிறிதோரிடத்து இணைப்பைத் தன்னிடத்துக் கொண்டிருப்பதால் 'கொண்டி'யாயிற்று. பகைவர் நாட்டைக் கொள்ளையிட்டுக் கொண்டு வருதலைக் 'கொண்டி' என்றதும், அந்நாட்டில் இருந்து கொண்டுவந்த மகளிரைக் 'கொண்டி மகளிர்' என்றதும், கருதத்தக்கன.

படர்கொடிகள் பற்றிச் செல்லுதற்கு இயற்கை உதவிய கால்கள், சுருள் சிம்புகளாம். அவை மரம், செடி, பந்தர், முதலிய வற்றைப் பற்றிக்கொண்டிருப்பதால், 'பற்றுக் கோடு'களாக மரம் முதலியவை விளங்குகின்றன. அக் கொடிகளுக்கு அமைந்த கொழு கொம்பு போலக், கொடியிடை மெல்லியல் நல்லார்க்குக் கொழுநர் பற்றுக் கோடாக விளங்குதலைப் பலரும் கூறுவர். ஒத்த உரிமைக்கு இவ்வுவமை பொருந்தாது என உரிமைப் பெண் உரத்து மொழிந் தாலும் மொழிதல் தக்கதே! ஆயின் சொல்லாட்சியைச் சுட்டல் முறைமை அல்லவோ!

'தீப் பற்ற வைத்தல்' நல் வழியிலும் உண்டு! அல்வழியிலும் உண்டு! 'இது பற்ருது' 'அது பற்ருது' என்பதோ வண்டமிழ் நாட்டின் வைப்பு நிதி! வையகம் அறிந்த வளநிதி! 'பற்ருக் குறைத்' திட்டத்தை வகுத்து வகுத்துப் பண்பட்டுப் போன நம்மவர் வீட்டு நிலையையும் நாட்டு நிலையையும் நானிலம் நாளும் நன்கு அறிந்து கொண்டுதானே உள்ளது!

ஈயம் பூசப்படாத பித்தளைக் கலம் களிம்பேறி உணவைக் கெடுத்தலையும், அஃதுண்ட உடலைக் கெடுத்தலையும் அறிந்ததே. அதனால் அல்லவோ, 'ஈயப் பற்று' வைப்பார் தெருத்தோறும் கூவிக் கூவி வருகின்றனர்!

அம்பு கட்டும் கயிற்றை முற்காலத்தவர் 'பற்ருக்கை' என்றனர். இக்காலத்தார் கூரையை வரிச்சுடன் இறுக்கிக் கட்டுதற்கு உதவும் புளிய வளார், கருவேல் வளார், கற்ருழை நார் முதலியவற்றைப் 'பற்ருக்கை' என்பர். 'பற்று ஆக்கை' என்பதே அது. ஆக்கை, யாக்கை, யாப்பு முதலியவை ஆர்த்தலாகிய கட்டுதல் வழியாக வந்தவை. எலும்பு, நரம்பு, தோல் முதலியவை இணைத்துக் கட்டப் பெற்ற யாக்கையையும், எழுத்து, அசை, சீர் முதலியவற்ருல் கட்டப் பெற்ற யாப்பு வகைகளையும் கருதுக.

தேடி வைத்த பொருளை எளிதில் விட்டுவிட எவரும் இசைவரோ? உடை அவிழ அல்லது நெகிழவிடாது போற்றுவது போல் போற்றுதலால்தானே 'உடைமை' என்று சொல்லப்படுகிறது. உடையாந் தன்மையுடையது உடைமை யாம்! அவ் வுடைமையாம் செல்வத்திற்கு ஒரு பெயர் 'பற்று' என்பது. பற்றிக்கொண்டு விடுதற்கு அருமையுடையது ஆகிய அப் பற்றையும், நற்குடிப் பிறந்தார் தம் இயற்கைப் பெருநலத்தால் பொருட்டாக எண்ணுர் என்பதைச் சுட்டுவார் திருவள்ளுவர். ''பற்றற்ற கண்ணும் பழமை பாராட்டுதல் சுற்றத்தார் கண்ணே உள'' என்பது அது.

தேடித் தேடித் தேர்ந்து கொள்ளவேண்டிய அறிவைப் 'பற்று' என்று கூறும் பரிபாடல். அறிவறியாளைப் 'பற்ருள்' என்னும் அது.

ஒன்றைப் 'பற்றி' ஆராய்தலும், ஒருவரைப் பற்றிப் பேசுதலும், ஒரு வழியைப் 'பற்றி' நடத்தலும் 'பற்றி' எவரே அறியார்? 'சிற்றில் நற்றூண் பற்றி' நின்ற காவற்பெண்டைப்பற்றிப், புறப் பாடல் மொழிகின்றது என்ருல், நாம் எதை எதைப் பற்றியெல்லாம், எவரெவரைப் பற்றியெல்லாம் நிற்கிருேம்! சிங்கள அரசும் படை யும் காவல் துறையும் வெறியரும் தமிழர் வீடெல்லாம் கூடெல்லாம் பற்றி எரித்தாலும் அதனை அறிந்த உணர்வுடையார் நெஞ்ச மெல்லாம் பற்றி யெரிந்தாலும் கொஞ்சமும் அதனைப்பற்றிக் கவலைப் படாத மரத்துப்போன மாந்தரும் உள்ளனரே!

'பற்றி' எரிய வைப்பதும் 'பற்று' என்பதுதானே வெறியர் முடிவு! இந் நாட்டின் மேலும் இந் நாட்டு மொழியின் மேலும் இந் நாட்டு மக்கள் மேலும் கொள்ளும் பற்றினை வெறியாட்டம் என்று சொல்லும் தந்நல வெறியாளர் இங்கேயே இல்லையா? அவர்கள் பற்றுமைப் பசப்பு ''நும்மது நம்மது நம்மது ஏவ'' என்று ஊற்றைப் பல் காட்டும் பசப்பேயாம்!

'பற்று வரவு' திறமையாக எழுதத் தெரியாத வணிகன் செல்வம் சேர்த்ததுண்டா? 'பற்றுச் சீட்டு' வாங்காமல் சொல்லும் கணக்கை முறைமன்றமோ வரியாயமோ ஏற்றுக்கொள்கின்றதா?

இத்துணைப் பற்றுகளையும் 'விடுக' என்பது எளிதாகலாம். விடுதல் எளிதோ? 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்றார் ஔவையார். ''பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு'' என்றார் திருவள்ளுவர். 'பல்வழி' வந்த 'பற்று' என்னும் சொல்வழியே எத்தனை எத்தனை பற்றுகள் விரிந்துள்ளன! 'தமிழ் வளம்' தமிழனிடத்து உண்டோ இல்லையோ! ஆனால் தமிழில் கொள்ளை கொள்ளையாய் உண்டு! - வெள்ள வெள்ள வரவாய் உண்டு!

---

## 'பிறவிப் பயன்!'

[வேலூர். ம. நாராயணன் எம். ஏ.]

''பிறந்தோமே!'' என்கின்ற கார ணத்தால்
 பெரும்பாலோர் பெயருக்கு வாழு கின்றார்;
இருக்கின்றார்! உண்டுறங்கி உலவு கின்றார்
 இயன்றவரை சந்ததியைப் பெருக்கு கின்றார்
இறக்கின்ற வேளையது வந்து விட்டால்
 எவருக்குஞ் சொல்லாமல் செல்லு கின்றார்;
குறிப்பாக மனம்நொந்து சொல்வ தானால்
 குதிரை; ஆடு; மாடுகூட இவற்றைச் செய்யும்!

''அரிதரிது மானிடராய்ப் பிறத்தல்!'' என்னும்
 ஔவைமொழிப் பொருளுணரா மக்கள் வாழும்
தெருமுனையின் வரையிலேனும் தமது கீர்த்தி
 தொடும்வண்ணம் நற்பணிகள் ஆற்ற வேண்டும்!
மரியாதைக் குரியவர்கள் சொல்லிச் சென்ற
 வழிகளிலே கவனத்தைச் செலுத்த வேண்டும்;
உரியதொரு நல்லிடத்தைச் சரித்தி ரத்தில்
 உருவாக்கிக் கொள்ள; தினம் முயல வேண்டும்!''

# *ஆதீனங்கள் வளர்த்த அருந்தமிழ்

[புலவர் மு. சிவச்சந்திரன், எம். ஏ., பி. எட்.,

துணைப் பேராசிரியர்,

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.]

முன்னுரை :

சங்ககாலத்திற்குப் பிறகு களப்பிரர் காலத்தில் தமிழ்மொழி பல்லாற்றுனும் நலிவுற்றிருந்தது என்பது வரலாற்றுண்மை. அதன் பின்னர் சைவ அடியார்களின் காலத்தில் அஃது ஆண்டவனை வழிபடும் தோத்திரமாக மலரத் தொடங்கியது இக்காலம் முதல் தமிழின் வளர்ச்சி சமய வளர்ச்சியுடன் இணைந்தே இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தரும், ஆண்டவனின் அருள்வாக்காலேயே 'நாவுக்கரசு' என்னும் நாமம் சூட்டப்பெற்ற அப்பரடிகளும், 'சொற்றமிழால் எம்மைப் பாடுக' என்று ஆண்டவனே கேட்டுக்கொண்டதற்கிணங்க சுந்தரத் தமிழில் பல தோத்திரங்களைப் பாடியருளிய சுந்தரரும், 'பாவை பாடிய வாயால் ஒரு கோவையும் பாடுக' என்று இறைவனே கேட்டுப் பெற்ற திருக்கோவையார் என்னும் முதற்கோவை நூலைப் பாடி யருளிய மாணிக்கவாசகரும், பூமாலை தொடுத்ததோடு அமையாமல் பாமாலையும் தொடுத்தளித்த சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாம் ஆண்டாளும்,

> "கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
> மணிவண்ணா! நீகிடக்க வேண்டா—துணிவுடைய
> செந்நாப் புலவன்யான் செல்கின்றேன் நீயுமுன்
> பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்"

என்று திருமாலையே தம்முடன் எழுந்தருளி வரக்கூறிய திருமழிசை ஆழ்வாரும், 'உலகெலாம்' என்று ஆண்டவன் அடி எடுத்துக் கொடுக்க அதனையே முதலாகக்கொண்டு பாடி முடித்த திருத் தொண்டர் புராண ஆசிரியர் சேக்கிழாரும், கவிச் சக்கரவர்த்தி என்று போற்றப்பெறும் கம்பரும், சந்தான பரம்பரைக் குருமுதல்வர் களும் உள்ளிட்ட பல்வேறு அருளாளர்களுடைய பாடல்களின் மூலம் தமிழ் குன்றின் மேலிட்ட விளக்காய்த் தழைத்து ஒளிவீச லாயிற்று. அது மேலும் ஏற்றம்பெற்ற காலம் ஆதீனங்களின் காலமாகும்.

ஆதீனம்—சொல்லாய்வு :

'ஆதீனம்' என்னும் சொல்லுக்கு 'அதிகரித்தல்' என்பது பொருளாகும். சமய நெறியையும் அற ஒழுக்கத்தையும் போற்றவும்

---

* இது திருச்சி வானொலி நிலையத்தில் இலக்கியப் பேருரையாக ஒலிபரப்பானது.

எங்கும் பரப்பவும் தோன்றிய நிறுவனங்களே திருமடங்களாகும். இத் திருமடங்களின் தலைவர்கள் சிறந்த பக்தியும் நிறைந்த ஒழுக்கமும் உடையவர்களாகத் திகழ்ந்துவருகின்ற காரணத்தால் அன்பர்கள் பலரும் அவ்வப்போது கொடுத்துவந்த பெருஞ்சொத்துக்கள் திருமடங்களுக்கு நிறைவாகச் சேர்ந்தன. அவற்றை நிர்வகிக்கும் பொறுப்பு அறத்தின் அடிப்படையில் திருமடங்களின் தலைவர்கள் இடம் வந்துசேர்ந்தது. அச் சொத்துக்களின் மூலம் சமயநெறியையும் அற ஒழுக்கங்களையும் மேன்மேலும் அதிகரிக்கச் செய்துவந்த காரணத்தால்' ஆதீனம்' என்னும் சொல் அத் திருமடங்களைக் குறிக்க எழுந்தது. இதுவன்றி வேறு காரணம் ஒன்றும் கூறுவர். 'ஆதீனம்' என்னும் சொல் 'அதினம்' என்னும் சொல்லின் திரிவு என்பர். 'அதினம்' என்றால் 'உரிமை' என்பது பொருளாகும். திருக்கயிலாய பரம்பரையில் வந்த உபதேச உரிமையுடையவர்கள் என்னும் பொருளில் 'ஆதீனம்' என்று வழங்கிவருகிறது என்று கூறுவதும் உண்டு.

**ஆதீனங்கள் பதினெட்டு:**

ஆதீனங்கள் பதினெட்டு என்று வித்துவான் திரு. சோமசுந்தர தேசிகர் அவர்கள் தாம் எழுதிய பதினேழாம் நூற்றாண்டுத் தமிழ்ப் புலவர் வரலாறு என்னும் நூலில் குறித்துள்ளார். இப் பதினெட்டுத் திருமடங்களும்பற்றிக் கீழ்வருமாறு அந்நூலில் அவர் குறித்துள்ளார்; அவை :

1) திருவாவடுதுறை ஆதீனம் 2) தருமபுர ஆதீனம், 3) காஞ்சீபுர ஆதீனம் 4) சூரியனார் கோயில் ஆதீனம் 5) சிதம்பரம் ஆகம சிவப்பிரகாசர் ஆதீனம் 6) பெருங்குளம் செங்கோல் ஆதீனம் 7) மதுரை திருஞானசம்பந்தர் ஆதீனம் 8) குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் 9) இராமேச்சுர ஆதீனம் 10) நீலப்பாடி ஆதீனம் 11) அன்னப்பன்பேட்டை தாயுமான சுவாமிகள் ஆதீனம் 12) சாரமாமுனிவர் ஆதீனம் 13) வேலாக்குறிச்சி ஆதீனம் 14) சொர்க்கபுர ஆதீனம் 15) சீர்காழி வள்ளலார் ஆதீனம் 16) வாணி ஆதீனம் 17) நாச்சியார் கோயில் ஆதீனம் (18) துழாவூர் ஆதீனம் என்பனவாம்.

இப் பதினெட்டுத் திருமடங்களும் மேலும் சில திருமடங்களும் ஆதீனங்கள் என்னும் வரிசையில் சேர்க்கப்படலாயின. வீரசைவ மடங்கள் என்று கூறப்பெறும் மயிலம் பொம்மபுர ஆதீனம், பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் திருமடம் போன்றனவும் இங்கே குறிக்கத்தக்கனவாம். இத் திருமடங்களின் தலைவர்கள் தமிழ் வளர்ச்சிக்குச் செய்துள்ள அரும்பணிகள் பலப்பல. தமிழ்க் கல்லூரி நிறுவித் தமிழ்ப் புலவர்களை உருவாக்கியும், அரியபல தமிழ் நூல்

களைப் பதிப்பித்து வெளியிட்டும் மாநாடுகளை நடத்தியும் பணிகள் பல செய்துவருகின்றன.

**மதுரை ஆதீனம்:**

மதுரை திருஞானசம்பந்தர் ஆதீனம், சமயாசாரியர்களுள் ஒருவராகிய திருஞானசம்பந்தர் திருப்பெயரால் அமைந்த பழமையான ஆதீனம் எனக் கூறுவர். இப்பொழுது பட்டத்தில் எழுந்தருளியிருப்பவர்களுக்கு முந்தியவர்கள் ''திருவருள் தவநெறி மன்றம்'' என்னும் பெயரால் ஓர் அமைப்பை ஏற்படுத்தி அதன் மூலம் மாநாடுகள், கருத்தரங்குகள் நடத்தியும், சொற்பொழிவுகளை நிகழ்த்துவித்தும் நல்ல பல நூல்களை வெளியிட்டும் அரும்பணி செய்தருளினார்கள். இதுபொழுது பட்டத்திலிருப்பவர்களும் குருமூர்த்திகளின்வழி சமயப் பிரசாரம் செய்தும் மாநாடுகள் நடத்தியும் தமிழும் சமயமும் தழைக்கப் பாடுபட்டு வருகின்றார்கள்.

**காஞ்சிபுரம் ஆதீனம்:**

காஞ்சிபுரம் தொண்டை மண்டல ஆதீனம் தொண்டை மண்டல முதன்மையார் சமூகத்திற்குரிய திருமடமாகும். இப்பொழுது பட்டத்தில் எழுந்தருளியிருப்பவர்களும் முந்தியவர்களும் வழிவழி நல்மரபும், தமிழ்ப்பற்றும், தமிழ்மொழிப் புலமையும் நிரம்பப் பெற்றவர்கள். தம்மை நாடி ஓடிவரும் அன்பர்களுக்கு நல் உபதேசங்கள் செய்துவரும் சீலமுடையவர்கள். தக்க தமிழ் அறிஞர்களைப் பாராட்டிப் பட்டம் வழங்கி அவர்களின் பணியினை ஊக்குவித்தருளும் நியமம் உடையவர்கள்.

**திருவண்ணாமலை ஆதீனம்:**

குன்றக்குடி, திருவண்ணாமலை ஆதீனத்தில் இதுபொழுது எழுந்தருளியிருந்து அருளாட்சி செய்துவரும் ஆதீனகர்த்தர் அவர்கள் தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளிலும் சென்று சமய நெறியையும் அற ஒழுக்கங்களையும் எளிய இனிய தமிழ்மொழியில் பரப்பிவரும் தகவுடையவர்கள். 'தவத்திரு குன்றக்குடி அடிகளார்' என்று தமிழன்பர்கள் அன்போடு அழைத்துப் போற்றும் பெருமையுடையவர்கள்.

'அருள்நெறித் திருக்கூட்டம்' என்னும் அமைப்பை ஏற்படுத்தி அதன்வழி திருமுறைகள், சாத்திரங்கள், திருக்குறள் போன்ற நூல்களைப் பரப்பிவரும் சிறப்புடையவர்கள். தமிழகத்தின்கண் உள்ள பல்துறை அறிஞர்களைத் தகுதியறிந்து பாராட்டிப் பட்டம் வழங்கி, தமிழ்ப்பணி செய்துவரும் சான்றோர்களுக்கு ஊக்கம் ஊட்டியருளுபவர்கள். (தொடரும்)

———

# எண்மர் எண்மணி மாலை

[மருத்துவர் மறையரசன்]

(முன் இதழ் சஅஅ ஆம் பக்கத் தொடர்ச்சி)

வாழ்த்து: (கலிவிருத்தம்)

கனிதமிழ்ச் சுவைமொழி கலப்பினை ஏலுமோ?
நனிபுகழ், பிறமொழி நடந்திடத் தாங்குமோ?
பனித்தமிழ்ச் சிறப்புசெய் பணியணி போற்றுமே!
தனித்தமிழ்த் தாளடி தகையென ஏற்றுமே!

**3.1. வீரமாமுனிவர்:**

(வெண்பா)

கொண்டல்போ தந்தை எலிசபெத்து நல்அன்பு
மண்டலால் வந்த மகவேபாக்—கொண்டல்
எனத்தமிழில் கூட்டும் இசைக்குயிலே உன்னை
நினைத்திடையில் விம்முமெம் நெஞ்சு.

**3.2. பரிதிமாற் கலைஞர்:**

('சானட்' வகை) அகவல்

நெஞ்சம் நிறைந்து கொஞ்சும் சூரிய,
துஞ்சும் தமிழர் துடித்தெழ வைக்கத்
தப்பிப் பிறந்த தமிழ; கைத்த
உப்பில் லாத பிறப்பால் ஆரிய,

வடமொழி பயின்று வளமொடு வாழ்ந்தும்
கடலெனப் பாசுரத் தொகைதரும் போதும்
அடலெனத் தமிழினை ஆய்ந்ததை ஓதும்
நடையுடை யுனையெந் தலையடி தாழ்த்தும்;

கோவிந்த சிவனார் சேயெனப் பிறந்தெம்
ஆவியுட் கலந்த ஐயா, சூரிய
நாரா யணனே சாத்திரி மாறிய
பேராம் பரிதிமாற் கலைஞனாய்ச் சிறந்தோய்;
மனமது தமிழினில் மூழ்கிய தாலே
இனமது கடந்துனை ஏத்துவம் மேலே!

## 3.3. மறைமலையடிகள் :

(கட்டளைக் கலித்துறை)

மேலான தீந்தமிழ்ப் பேச்சும் எழுத்தும் மெருகுடனன்
பாலான தீஞ்சுவைக் கூட்டெனத் தந்ததோர் பாற்கடலே!
நூலான நின்னுடை ஆராய்ச்சிக் கட்டுரை நோய்தவிர்க்கும்
கோலான தெவ்வகை கூறுதி யோதமிழ்க் கொள்கையனே !

## 3.4. பாவேந்தர் :

(வஞ்சி விருத்தம்)

கொள்கைப்பிடி தளராதொரு குணமேவிய வேந்து
கள்ளைக்குடி மயக்கந்தரு கருமேவுபா வேந்தி
உள்ளம்படி பழமைத்தனம் உதறுந்தமிழ் மணக்கும்
துள்ளால்நிறை சிந்தைத்திகழ் தந்தைக்கொரு வணக்கம்.

## 3.5. பாவாணர் :

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

வணங்குந் தகைசால் தமிழ்மொழியின்
　　வலிமை யறிந்த பிறமொழிகள்
இணங்கும் ஏற்கும் எனப்பணிந்தே
　　இருத்தல் போலே இருந்துதமிழ்
அணங்கின் பழமைச் சிறப்பழிக்கும்
　　அவற்றின் கலிப்பைக் கண்டுவெம்பிப்
பிணங்கி ஏற்காப் பாவாணர்
　　பிறந்தார் இதுநம் தவப்பேறே!

நீயுமொரு மகவெம்போல் நில்லாய் உள்ளம்
　　நினைந்துருகி நினைந்துருகி நாளும் நாளும்
தாயுமொரு கலிப்புமொழி அழுக்காய்ப் போகத்
　　தடுக்குமொரு நல்லெண்ணங் கொண்டே வுன்றன்
தூயவொரு தமிழாய்வால் தேவ நேய,
　　துணிந்தவொரு தூசுமின்றித் தட்டி வைத்தீர்
நாயுமொரு கருத்துசொலும்; தமிழ ரெல்லாம்
　　நன்றியொடு தனித் தமிழை வளர்க்கின் றாரோ?

## 3.6. வ. சுப்பையா (பிள்ளை) :

தமிழை வளர்க்கின்ற தென்புலவர் பேணி
அமிழ்தின் கனிப்படைப்பைக் காய்ந்தே—உமிழாது
தங்கமாய்த் தாங்குந் தாமரைச் செல்வவுன்
பொங்கும் புகழும், பதிப்பாய்
எங்கும் சிறந்து எதிலும் நிலைக்கும்!

3.7. குடந்தைப் பண்ணுய்வாளர் :

நிலைக்கு மெனவே நிறைவாய் இசையை
நின்றே ஆய்ந்து நிமிர்ந்தே வாழ்ந்து
களைத்தி டாத காளை உள்ளார்
கவலைப் படாதே—எந்தக்
கடுமையான தொல்லை வரினும்
கருத்தை விடாதே.

தொண்டு தோய்ந்த தூய உள்ளம்
துறவி போலும் வழியும் வாழ்வும்
கொண்டு சுந்த ரேசன் வந்தார்
குழைந்து விடாதே—மகிழ்வைக்
கூடும் இசையில் செம்மை சேரும்
குறைந்து விடாதே.

குரலும், துத்தம், விளரி, தாரம்,
கொள்கைக் கிளையும், உழையும், இளியும்
வரவும் போழ்ச ரிகம பதநி
வருத்தப் படாதே—நம்மை
வளைக்கும் வேற்று நாட்டி னிசையும்;
வளையக் கூடாதே!

3.8. பாவல ரேறு :

கூடாமல் வெவ்வேருய்க் கூறுபட்ட ஏ தமிழா!
ஊடாக உள்ளதடை நீக்கிவிடு—தேடாமல்
வந்துன்னைச் சேர்ந்திடுமோ தென்நாட்டின் ஆளுகையும்
கந்தையினைக் கட்டிவரக் கால்பிடித்து—நொந்து நொந்து
நானடிமை என்றுவாழல் வாழ்வோடா?—மேற்கொம்புத்
தேனடியில் நிற்கும் முடமோடா?—வீணடித்த
வாழ்வெல்லாம் போதுமடா வாழ்வோமே ஒற்றுமையாய்
தாழ்வும் தலைக்குனிவும் தாமாட—ஆழ்மனத்துத்
தோன்றும் பகையுணர்வைத் தூக்கியெறி—உன்னினத்தின்
ஊன்றும் உணர்வுமட்டும் மேலோங்கின் சான்ருக
நம்மொழி நம்மினத்தை நாமாளும் நாள்வருமே!
எம்மொழி ஏற்றம் உலகறியும்—தெம்மாங்குப்
பாடிக் களித்திடலாம் பைந்தமிழின் ஆட்சியிலே
ஆடிக் களித்திடலாம் என்றெல்லாம்—பாடி
அமிழாது காக்குமெழில் தென்மொழியா சான்பின்
தமிழ்சேர் உன்னினத்தோ டொத்து.

———

# செவ்வகத்திப் பூநாரை

## (FLAMINGO)

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

நீரில் வாழும் பறவைகளில் பூநாரை என்ற பறவை தனித் தன்மை வாய்ந்தது. அண்மையில் இதைப்பற்றி ஒரு செய்தியை ஓர் அறிவியற் பேரறிஞர் Science Reporter (July 1978) என்ற திங்களிதழில் எழுதியதைப் படித்தேன். இவ்வறிஞர் கூறிய இந்தச் செய்தி உவமை வாயிலாகச் சங்க நூல்களில் வருவதைக் கண்டு வியப்பும் மகிழ்ச்சியுமுற்றேன். இந்தப் பூநாரை என்ற பறவை ஏறக்குறைய 1½ மீட்டர் உயரமுள்ளது வெகு தொலை வில் இருந்து பார்க்கும்போது சராசரி மனிதனுடைய உயரம் போலத் தோற்றமளிக்கும் இந்தப் பூநாரை கோடிக்கரையில் ஆண்டு தோறும் குளிர் காலத்தில் ஆயிரக்கணக்காக வந்து தங்குகின்றன. சென்ற ஆண்டு முப்பது, நாற்பதாயிரத்துக்கு மேற்பட்ட பூநாரைகள் குளிர் காலத்தில் கோடிக்கரைக்கு வந்து தங்கியிருந்தன. இந்தப் பூநாரை முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பது குசராத்தில் 'இரன் ஆப் கட்சு' (Rann of Cutch) என்ற இடத்தில் ஆகும். இதைப்பற்றிய விளக்கம் யான் எழுதிக் கழக வாயிலாக வெளிவந்த சங்க நூல் களில் புள்ளின விளக்கம் என்ற நூலில் பார்க்கலாம்.

இந்த அறிஞர் எழுதிய செய்தியைப் படித்தபோது சங்க நூல் களில் கூறப்பட்ட உவமைச் செய்தி எனது நினைவிற்கு வந்தது. "The fascinating, fabulous flamingo is a regular winter visitor to the natural lagoon, the Chilka Lake, Orissa. Days are gone when they came in flocks of hundreds and thousands. Legend has it that once an enemy army reached the shores of Chilka with a view to invading parikud, on the other side of the lake. To its horror, the army saw hundreds and thousands of soldiers in battle array on the Parikud side ready for the fray. The enemy retreated in sheer Panic. But the 'army' of Parikud was nothing but a flock of flamingoes (Phoenicopterus roseus, locally known as Era and Marala), which with their red legs and rosy-pink-black-white colouration of the plumage and 1 to 1½ metres height, appeared like an army of uniformed soldiers from the other side of the lake, about eight kilometers across.

இச் செய்தியை எழுதியவர் B. K. Behura என்ற விலங்கியல் பேராசிரியராவார். உட்கல் (Utkal) பல்கலைக் கழகத்தில்

பேராசிரியராக உள்ளவர். ஒரு படையானது எதிரியின் நாட்டைப் படையெடுக்க வந்தபோது சில்கா ஏரியில் இருந்த பல்லாயிரக் கணக்கான பூநாரைகளைத் தொலைவில் கண்டு, அவைகளை எதிரிகளின் பெரும்படை என்று கருதி, பின்வாங்கினார்கள் என்று மக்கள் செவிவழிச் செய்தியாகக் கூறினதைச் சுட்டிக்காட்டியுள்ளார். தொலைவில் இருந்து பார்க்கும்போது 1½ மீட்டர் உயரமுள்ள பூநாரைகளின் பெருங்கூட்டம் படை அணிகள் போலவே தோற்றமளித்திருக்கிறது. எதிரிகளின் அணியைக் கண்டுகொள்ள இக்காலத்தில் உள்ள தொலை நோக்கிகள் போன்ற கருவிகள் அக்காலத்தில் இல்லை. ஆதலின் வரிசை வரிசையாகக் காணப்படும் பூநாரைக் கூட்டங்களைத் தொலைவில் கண்டு படை அணி வகுப்போர் என்று மலைத்தது இயற்கையே. இவ்வாறு மலைப்பதையே உவமை வாயிலாகச் சங்க நூல்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் கூறியுள்ளது வியப்பைத் தருகின்றது.

"நிரைதிமில் களிருகத் திரையொலி பறையாகக்
கரைசேர் புள்ளினத் தஞ்சிறை படையாக
அரைசுகால் கிளர்ந்தன்ன வுரவுநீர்ச் சேர்ப்பகேள்"

—கலித்தொகை 149

"பன்னிறப் புள்ளினம் பரந்தொருங் கீண்டிப்
பாசறை மன்னர் பாடிபோல
வீசுநீர்ப் பரப்பி னெதிரெதி ரிருக்கும்"

—மணிமேகலை 8 : 31-32

"உரவுநீர்த் திரைபொர வோங்கிய வெக்கர்மேல்
விரவுப்பல் லுருவின வீழ்பெடை துணையாக
விரைதேர்ந்துண் டசாவிடூஉம் புள்ளின மிறைகொள
முரைசுமூன் றுள்பவர் முரணியோர் முரண்டப
நிரைகளி றிடைபட நெறியாத்த யிருக்கை போற்"

—கலித்தொகை 132

கலித்தொகைப் பாடல் (149) புள்ளினத் தஞ்சிறை படையாக அரைசு கால் கிளர்ந்ததுபோல் இருந்ததாகக் கூறியுள்ளது படையினம் போலப் பல்லாயிரக்கணக்கான பறவைகள் இயற்கையில் காணப்பட்ட பூநாரை என்பதில் ஐயமில்லை. அதுபோல மணிமேகலையும் பாசறை மன்னர் பாடிபோல வீசு நீர்ப்பரப்பினில் எதிர் எதிர் இருக்கும் என்பதுவும் குறிப்பிடத்தக்க செய்தியாகும். பூநாரை வெண்மை, சிவப்பு சிறிது கருப்பு கலந்த பறவையாக இருப்பதால் பன்னிறப் புள்ளினம் என்றழைக்கப்பட்டது. கலித்தொகை 132ஆம் பாடல் பூநாரையைத் தெளிவாகக் கூறியுள்ளது. இரை தேர்ந்து அங்கேயே எக்கர்மேல் தங்கும் பறவையினம்

மூவரசர் படைபோல இருந்ததாகக் கூறியிருப்பது அரிய செய்தி யாகும். ஏனென்ருல் இரை தேர்ந்துண்டு எக்கர் மேலேயே தங்கும் ஒரே பறவையினம் பூநாரையாகும். இந்தப் பல்லாயிரக்கணக்கான பறவைகள் மூவரசர் படைபோல இருந்ததாகவும் கூறியுள்ளது.

முதல் முதலில் கலித்தொகையில்தான் பூநாரையைப்பற்றிப் பொருத்தமான விளக்கம் காணப்படுகின்றது.

"பொன்மலை சுடர்சேரப் புலம்பிய விடனேக்கித்
தன்மலைந் துலகேத்தத் தகைமதி யேர்தரச்
செக்கர்கொள் பொழுதினு னெலிநீவி யினநாரை
முக்கோல்கொள் அந்தணர் முதுமொழி நினைவார்போ
லெக்கர்மே லிறைகொள்ளு மிலங்குநீர்த் தண்சேர்ப்ப"

—கலித்தொகை 126

முக்கோல்கொள் அந்தணர்போல நாரை தோன்றுவது பூநாரைக்கே பொருந்தும். இந்த நாரை எப்போதும் நீண்ட கழுத்தை, சேறு சகதி நிறைந்த எக்கர் நீரில் விட்டு அலகால் துழாவி உணவை அருந்தும்போது இரண்டு கால்களையும் நீண்ட கழுத்தையும் தொலைவில் இருந்து பார்ப்போர்க்கு மூன்று கால்கள் போலத் தோன்றும். மாலைக்காலத்தில் எக்கர்மேல் இறைகொளும் அதாவது தங்கும் நாரை பறவையினங்களில் பூநாரை ஒன்றே. இது கூடு கட்டுவதில்லை. எக்கரிலேயே உணவை உண்டு அதிலேயே இரவு தங்கும். காவி ஆடை போர்த்த அந்தணர் குழாம்போல் இருந்ததாகக் குறித்தது, இளஞ்சிவப்புத் தூவிகளையுடைய நாரை யைக் குறித்ததையேயாகும்.

பூநாரைக்குத் தமிழ்நாட்டில் சில பெயர்கள் வழங்குகின்றன. காரைக்கால் பகுதியை ஒட்டிய இடங்களில் வழங்கும் 'சிவப்பு அகத்திப் பூநாரை' என்ற பெயர் மிகமிகப் பொருத்தமானது. இதன் அலகு சிவப்பு அகத்திப் பூ போன்றே வளைந்தும் சிவந்தும் காணப் படும். பூநாரைக் கூட்டத்தை அரசர்களின் படைகளுக்கு ஒப்பிட்டுக் கூறியது மகிழ்ச்சி தரும் சிறந்த பொருத்தமான உவமையாகும்.

———

## குருமணியின் அருள்மொழி

மனித வாழ்க்கை இரண்டு கூறுகளை உடையது. ஒன்று அகவாழ்க்கை; மற்ருென்று புறவாழ்க்கை. புறவாழ்க்கையின் பல்வேறு தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கே அரசும் அதன் முயற்சிகளும் அமைகின்றன. அதுபோல மக்களின் அக வாழ்க்கையினைச் செம்மைப்படுத்தும் பெரும்பணி அறநிலையங் களுக்கும் ஆதீனத் திருமடங்களுக்கும் உண்டு.

தருமை ஆதீனம்.

# கோனேரிராசபுரத்துக் குழப்பங்கள்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம்.பி.பி.எசு., டி.ஓ.]

கோனேரிராசபுரம் தேவாரப் பாடல்பெற்ற ஓர் அழகிய திருத்தலம். இவ்வூர் கும்பகோணத்திலிருந்து காரைக்கால் செல்லும் வழியில், பதினெட்டு கிலோமீட்டர் தொலைவில் உள்ள புதூரிலிருந்து கிழக்குப்புறமாகச் செல்லும் மண்சாலையில் மூன்று கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. அப்பர் பதிகத்திலும் சோழர்களின் கல்வெட்டுகளிலும் திருநல்லம் என்று வழங்கப்படும் இத் தலம் இன்று கோனேரிராசபுரமாகப் பெயர் மாறியுள்ளது. அப்பரும் சம்பந்தரும் பாடிய இங்குள்ள உமைக்குநல்லவன் கோயிலும் இன்று உமாமகேசுவரர் கோயிலென்று அழைக்கப் படுகிறது.

அப்பர் காலத்தில் செங்கல் கட்டடமாக இருந்த இக் கோயிலைக் கற்றளியாக்கிய பெருமைக்குரியவர் கண்டராதித்த சோழரின் மனைவியாரும் உத்தமசோழரின் தாயாருமான செம்பியன் மாதேவி யாராவார். இம்மம்மையின் பேரருளால், எழுப்பப்பட்ட இக் கோயிலைப்பற்றிய சில செய்திகள் பல பேரறிஞர்களைக் குழப்பி யுள்ளன. பொதுவாகக் கோயில் வரலாறுகளில் குழப்பம் இருக்கும்; சில கோயில்களில் அவற்றிலுள்ள சிற்பங்கள் குறித்துக் கருத்து மாறுபாடு இருக்கும். இன்னும் சில கோயில்களில் கல்வெட்டுச் செய்திகளின் காலக் கணிப்பில் குழப்பம் நேரிடும். ஆனால் கோனேரிராசபுரத்துக் கோயிலிலோ ஏராளமான குழப்பங்கள். கோயிலின் வகையில் குழப்பம்! இங்குள்ள செப்புத்திருமேனிகளுள் ஒரு தொகுதி யாரைக் குறிக்கிறது என்பதில் குழப்பம்! மையக் கோயிலின தெற்குச் சுவரிலுள்ள சிற்பத்தொகுதியில் செம்பியன் மாதேவி இருக்கிறாரா இல்லையா என்ற குழப்பம்! இங்குள்ள கல் வெட்டொன்றில் 'மதுராந்தகி ஈசுவரமுடையார்' என்று குறிக்கப் பெறும் கோயில் இதுவா, வேறொன்றா என்பதில் குழப்பம்! இப்படிக் குழப்பங்களின் மொத்த வடிவமாக இக் கோயில் காட்சியளிக்கும் துன்பமான நிலைக்கு ஒரு முடிவு வேண்டாமா என்ற ஏக்கத்தில்தான் இக் கோயிலையும் செம்பியன மாதேவியார் திருவடிவம் இருப்பதாகக் கருதப்படும் பிறகோயில்களையும் கண்டு மகிழ்ந்த நிலையில் இந்த ஆய்வுக்கட்டுரை எழுதப்படுகிறது.

புகழ்பெற்ற கல்வெட்டு அறிஞரும் ஆராய்ச்சியாளருமான டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் கோனேரிராசபுரத்துக் கோயிலைப்

பற்றி எழுதும் இடத்தில், 'திருநல்லம்' என்ற கோனேரிராசபுரத்தில் கண்டராதித்தனின் நினைவாக அவர் மனைவியார் செம்பியன் மாதேவியார் ஒரு பள்ளிப்படை எழுப்பினார் என்று குறிப்பிடுகிறார்.[1] இறந்துபட்டவர்களைப் புதைத்தலைப் பள்ளிப்படுத்துதல் என்பர். அப்படிப் பள்ளிப்படுத்தப்பட்ட இடத்தே எடுக்கப்படும் கோயில் பள்ளிப்படைக்கோயில் எனப்படும். முதலாம் ஆதித்தன் இறந்த தொண்டைமானாட்டில் பராந்தக சோழர் பள்ளிப்படைக் கோயிலை எடுத்தார்.[2] முதலாம் இராசராசனால் மேற்பாடி என்னும் இடத்தில் அரிஞ்சிகையீசுவரம் என்ற பெயரில் அரிஞ்சய சோழனுக்குப் பள்ளிப்படைக்கோயில் எடுப்பிக்கப்பட்டது.[3] இவையெல்லாம் கல்வெட்டுகள் வழி வரலாறான உண்மைகள். ஆனால் திருநல்லம் கோயில் டாக்டர் நாகசாமி அவர்கள் குறிப்பதுபோல் பள்ளிப்படைக் கோயில் என்பதற்கு ஆதாரம் என்ன என்பதுதான் நமக்குப் புரியவில்லை. கி. பி. 957இல் இறையடி நீழலெய்தியதாகக்[4] கருதப்படும் கண்டராதித்தர், எவ்விடத்தில் எப்படிக் காலமானார் என்பதற்கு எந்தவிதச் சான்றுகளும் கிடையா. எந்தவிதமான அகச்சான்றும் புறச்சான்றும் இல்லாத நிலையில் இக் கோயிலைப் பள்ளிப்படைக்கோயில் என்று அறிவிப்பது எப்படிப் பொருத்த முடையதாகும்?

மேலும் இறந்த ஒருவரைப் புதைத்த இடத்தில் எடுப்பதுதான் பள்ளிப்படைக்கோயில். ஆனால் இந்தக் கோனேரிராசபுரம் கோயிலோ கி. பி. ஏழாம் நூற்றாண்டில் இருந்தே செழிப்பாக இருந்துவந்தமைக்கு அப்பரும் சம்பந்தரும் ஆதாரத் தூண்களாய் நிற்கிறார்கள். எத்தனை செல்லமாக,

"உமைக்கு நல்லவன் தான் உறையும்பதி
நமக்கு நல்லது நல்லம் அடைவதே"

என்று அப்பரடிகள் இக் கோயில் இறைவனைப் பாடிக் களிக்கிறார்.[5] ஏற்கெனவே இருந்த ஒரு கோயிலைக் கற்றளியாக மாற்றுவது வேறு, இறந்தவர்களைப் புதைத்த இடத்தே புதியதாய்க் கோயிலை எடுப்பது வேறு. அம்மை இக் கோயிலைக் கற்றளியாக்கியதாகத்தான் கல்

---

1. தமிழ்நாட்டுக் கோயில்கள் கட்டுரை, தமிழகக் கோயிற் கலைகள், டாக்டர் இரா. நாகசாமி, பக். 28.

2. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும், எஸ். ஆர். பால சுப்பிரமணியம், பக். 310.

3. Ibid, பக். 364.

4. பிற்காலச் சோழர் வரலாறு, தி. வை. சதாசிவப்பண்டாரத் தார், பக். 64.

5. ஐந்தாம் திருமுறை, தருமையாதீன வெளியீடு, 1961, பக். 254.

வெட்டு சொல்கிறதே தவிர பள்ளிப்படைக்கோயில் என்ற தொடரே எந்த ஒரு கல்வெட்டிலும் இல்லை. செம்பியன் மாதேவி இக் கோயிலைக் கட்டியதாகக் கூறும் கல்வெட்டில், ''ஸ்ரீகண்டராதித்த தேவர் திருநாமத்தால் திருநல்லமுடையார்க்குத் திருக்கற்றளி எழுந்தருளுவித்து''[6] என்றுதான் வரிகள் வருகின்றன.



கண்டராதித்த சோழர் அமர்ந்து வணங்கும் வடிவம்

முதற் பராந்தகன் தன் தந்தையான முதலாம் ஆதித்த சோழனுக்கு எடுப்பித்த பள்ளிப்படைக் கோயிலான தொண்டைமானூட்டு ஆதித்தேசுவரத்துக் கோயில் கருவறையின் அடித்தளத்தின்மீது காணப்படும் முதற் பராந்தகனின் முப்பத்துநான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு தெள்ளத்தெளிவாக இக் கோயிலைப் பள்ளிபபடைக் கோயிலென்று அறிவிக்கிறது. பள்ளிப்படை வாகீசுவர பண்டித பட்டாரர் ஸ்ரீ கோதண்டராமேசுவரமாகிய ஆதித்யேசுவரத்து ஆழ்வாருக்கு'' என்ற வரிகளைக் கவனித்தால் இது விளங்கும்.[7]

திருநல்லம் கல்வெட்டு எதிலும் இதுபோன்ற தெளிவான அறிவிப்பு மட்டுமன்று, பொருத்தமான சுட்டிக்காட்டலும் இல்லை. அம்மை மிகத் தெளிவாக இதைத் திருக்கற்றளி என்று, தாம் எடுப்பித்த வரலாறு கூறும் கல்வெட்டிலேயே பொறிததுவிட்டுப் போயிருக்கும்போது இதைப் பள்ளிப்படைக் கோயிலாய்க கொள்வது

6. S. I. I Vol. III No. 146, ARE 450 of 1 08.

7. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும்—எஸ். ஆர். பாலசுப்பிரமணியம், பக். 311.

எவ்விதத்திலும் பொருந்தாமை காண்க. மேலும் ஏற்கெனவே விளங்கும் ஒரு கோயிலை, இறந்தவர்களைப் புதைக்க யாரும் பயன் படுத்துவதில்லை என்பதையும் இங்கு மறந்துவிடக்கூடாது. எனவே எப்படி நோக்கினும் திருநல்லம் கோயில் பள்ளிப்படைக் கோயிலன்று என்பது தெளிவு.

இனி அடுத்த குழப்பத்திற்கு வருவோம். இக் கோயிலில் பல செப்புத்திருமேனிகள் உள்ளன. அவற்றுள் சில செம்பியன் மாதேவியார் செய்தளித்தவை. அவ்வம்மை செய்தளித்த செப்புத் திருமேனிகளுள் சிறப்பானது காளத்தேவர் தொகுதியாகும். இக் காளத்தேவர் தொகுதியை மணவழகர் (கல்யாணசுந்தரேசுவரர்) தொகுதியாகச் சிலரும் இத் தொகுதியிலுள்ள தேவியைச் செம்பியன் மாதேவியின் வடிவமாகச் சிலரும்[8] தவருகக் குறிப்பிட்டுக் குழப்பி யிருக்கிருர்கள்.

காளத்தேவரா மணவழகரா என்ற என்னுடைய தனிக் கட்டுரையொன்றில் (செந்தமிழ்ச் செல்வி மே இதழில் வெளி யானது) இதைப்பற்றி மிக விரிவாக எழுதியுள்ளேன். படிம இலக் கணப்படி அது காளத்தேவர் வடிவமாயிருக்க, சிலர் அதை மணவழகர் தொகுதியென்று மயங்கியதும், அத் தொகுதியில் இருக்கும் தனித்த தேவி வடிவம் மணவழகர் தொகுதிக்குரிய தேவியாய் இருக்க, அதைச் செம்பியன் மாதேவியென்று சிலர் குழம்பியதும் வேடிக்கைதான். இன்னும் அத் திருக்கோயிலில் இத்திருவடிவங்கள் இருக்கின்றன, ஆர்வமுள்ளவர்கள் போய்ப் பார்க்கலாம். காளையும் இறைவனுமாய் ஒரு தளத்தில் காளத் தேவர் தொகுதியாய் விளங்க, தேவி, தனித்தளத்தில் மணவழகத் தேவிக்குரிய இலக்கணங்களுடன், பொருந்தாத் துணையாய் நிற்கிருர். இருவேறு தொகுதிகளைச் சேர்ந்த திருமேனிகளை ஒன்ருக்கியதால் வந்த குழப்பம் இது. இக் கோயிலில் உள்ள உத்தமசோழன் கல்வெட்டு ஒன்றிலேயே, காளத்தேவர் படிமம் இக் கோயிலுக்குத் தரப்பட்டு, அதற்கு வழிபாடு திருமுழுக்கு முதலியன நடந்த செய்திகள் காணப்படுகின்றன. மணவழகர் வடிவம் இருந்தமைக்கு எந்தக் கல்வெட்டிலும் ஆதாரமில்லை. இப்படி ஆணியடித்தாற்போல் ஆதாரங்கள் இருந்தும் படிம இலக் கணததின்படி திருமேனிகள் அமைந்திருந்தும், பிரித்தறிய முடியாத நிலையில் இக் குழப்பம் நேர்ந்துள்ள கொடுமை துன்பமானது.

---

8. Portrait sculpture in South India T. G. Aravamuthan, Page. 17-18.

செம்பியன் மாதேவியார், கல்வெட்டு இதழ் 5; திரு. வெ. வேதாசலம், பக். 19-27.

இனி மூன்ருவது குழப்பத்துக்கு வருவோம். இக் கோயிலில் கருவறையின் தென்புறச்சுவரில் ஒரு சிற்பத்தொகுதி காணப்படுகிறது. இந்தச் சிற்பத்தொகுதியில் ஒரு சிவலிங்கமும் நான்கு மனித உருவங்களும் உள்ளன. இந்தச் சிற்பத் தொகுதியைப்பற்றிப் பல அறிஞர்கள் பல்வேறு விதமான கருத்துகளைத் தெரிவித்திருக்கிருர்கள்.

திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம், மூலத்தானத்தின் தென் சுவரில் லிங்கத்தை வழிபட்டுக்கொண்டிருக்கும் கண்டராதித்தன், அவன் பின்நிற்கும் செம்பியன் மாதேவி என்பார் சிலைகளின் கீழ்க் கல்வெட்டொன்று காணப்படுகின்றது என்று குறிக்கிருர்.[9]

(தொடரும்)

---

9. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும்—எஸ். ஆர். பாலசுப்பிரமணியம், பக். 339.

———

## நிமிர் மலையாய் நின்ருர் நெடிது

[கவிஞர் இமயபாரதி]

சீரிளமைத் திண்செயலும் தேனூறும் சொல்வீச்சும்
பாரினியப் பேராளர் பண்பாடும்—ஈரோட்டு
வேந்தர் பெரியார் விளைவய லில்பூத்த
ஏந்தல்அண் ணுவின் இலக்கு. 1

வேற்று மொழியால் விளைதீதை மண்பரப்பி
போற்றித் தமிழைப் புகழ்ந்தேத்தி—வீற்றே
அரியணையில் செம்மை அரசோச்ச வைத்த
விரிகதிர்அண் ணுவை விரும்பு. 2

சென்னைராஜ் யத்தைத் திகழ்தமிழ் நாடாக
இந்தியப்பே ரேட்டில் எழுதவைத்த—சிந்தனை
ஊற்று மணற்கேணி ஒப்பரிய அண்ணுவின்
ஆற்றல் அளத்தல் அரிது. 3

வாணிகம் கூட்டி வரிகள் குறைவாக்கப்
பேணித் தொழில்கள் பெரிதாக்க—வீணில்
உண்டு களிப்பார் உழைப்பருமை நெஞ்சேற்ற
அண்ணு அமைத்தார் அரசு. 4

வாழ்ந்திருந்த நாளில் வலுவான கொள்கையும்
ஆழ்ந்த செயல்வல்லார் ஆயிரமும்—தாழ்ந்த
சமூகம் உயர்த்தவும் சார்ந்ததால் அண்ணு
நிமிர்மலையாய் நின்ருர் நெடிது. 5

## கொற்கையருகில்
# திருவள்ளுவர் சிலை திறப்பு விழா



கொற்கைத் தமிழ் மன்றத்தார் ஏரலில்
அமைத்த திருவள்ளுவர் சிலை



வள்ளுவர் சிலையருகில் நிற்போர்:
கொற்கைத் தமிழ்மன்றத் தலைவர் புலவர் ச. சிவசங்கு
அவர்களும், செயலர் க. அய்யாத்துரை அவர்களும்



சிலை திறப்பு விழா ஊர்வலத்தின் ஒரு காட்சி



தமிழ் மூவேந்தர்களின் கொடிகளை ஏந்தியோர்
யானைமீது அணிவகுப்பு

# கொற்கையருகில்
# திருவள்ளுவர் சிலை திறப்பு விழா

[புலவர். ச. சிவசங்கு, கொற்கை]

முன்னாளில் திருநெல்வேலி மாவட்டத்தில் பாண்டியனின் பழம் பெரும் தலைநகராக விளங்கிய கொற்கை, இன்று ஒரு சிற்றூராகக் காட்சியளிக்கிறது. எனினும் அதன் பழம் பெருமையை நிலைநாட்டும் வகையில் கொற்கைத் தமிழ் மன்றத்தார் பல அரிய தமிழ்ப் பணிகள் ஆற்றி வருகின்றனர். அவற்றுள் தலையாயது அண்மையில் அவர்கள் ஏரலில் அமைத்துள்ள திருவள்ளுவர் சிலையாகும். உலகப் பொதுமறை வழங்கிய அப் பெருமானின் சிலை திறப்பு விழா 11—8—84இல் சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது. தமிழ்ச் சித்தர் பாவலரேறு பெருஞ் சித்திரனார் அவர்கள் இச் சிலையைத் திறந்து வைத்தார்கள். இவ் விழாவில் தமிழறிஞர் பலர் கலந்துகொண்டதும், இவ் விழாவினை யொட்டி நடைபெற்ற மாபெரும் ஊர்வல நிகழ்ச்சியும் ஈண்டுச் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவையாகும். அஃதொரு சிற்றூராயினும் அங்கு நடைபெற்ற ஊர்வலம், மூன்று மணிநேர நிகழ்ச்சி எனில் தமிழ் மன்றத்தாரின் பணி எத்துணை சிறப்பு வாய்ந்தது என்பதை நாம் விளக்கத் தேவையில்லை, இனி அவ்வூர்வலக் காட்சியினைக் காண்போம்.

> ''முரசு முழங்குதானை மூவருங் கூடி
> அரசவை இருந்த தோற்றம் போல''

என நாம் இலக்கியத்தில் படித்த காட்சியினை நேரில் கண்டோம். ஒப்பனை செய்யப்பட்ட கடகளிற்றின்மீது மூவேந்தர் இருந்து, வில், புலி, கெண்டை சின்னங்கள் பொறித்த கொடிகளை ஏந்திவந்த காட்சி ஏடுகளில் படித்த பழந்தமிழ் மன்னரை நினைவூட்டும் அரிய காட்சியாக விருந்தது. அதனையடுத்து :

வடவரை வணக்கிய வயவேந்தன் சேரன் செங்குட்டுவன் கனக விசயர் தலையில் கல்லேற்றி வந்த காட்சி பலரும் வியந்து பாராட்டத் தக்கதாயிருந்தது. அதனையடுத்து, அழகியதொரு பல்லக்கு வருகிறது; அதில் தமிழன்னை திருவோலக்கமிருக்கிறாள். அவளெதிரே ஐம்பெருங் காப்பியங்களாக உருவகித்து ஒப்பனை செய்யப்பெற்ற மகளிர் காட்சிதர ஒரு பெரும் சரக்குந்தில் இவ்வூர்வலம் நடைபோடுகிறது. ஆகா! இஃதன்றோ தமிழ்க் காட்சியெனக் கண்டோர் வியந்தனர்.

அடுத்து, சீருடை அணிந்த மாணவர் விறுநடை போட்டு வந்தனர். அவர்கள் அறம்-38, பொருள்-70, இன்பம்-25 என்று எழுதப்பட்டிருந்த தட்டிகளைத் தாங்கி வந்தனர். அவர்களைத் தொடர்ந்து ஆயிரத்திற்கு மேற்பட்ட மாணவர் குழாம் திருக்குறள் அறவொலிகளை எழுப்பியவண்ணம் அணிவகுத்து வந்தனர்.

ஊர்வலத்தில் பாவலர் பெருஞ்சித்திரனார், தாமரை அம்மையார், சொல்லாய்வறிஞர் அருளி, ஏரல் திருமிகு சேர்மன் கோயில் அறங்காவலர் அருணாசலனார், மற்றும் அறிஞர்களும் பெருமக்களும் ஏறத்தாழ அரைக்கல் தொலை நீண்டதோர் ஊர்வலத்தில் பெருமிதமோடு நடந்து வந்தனர்.

இத்துணை சிறப்புகளுடன் மங்கல இசைமுழக்கம், திக்கெலாம் புகழும் திருக்குறள் ஒலி, தமிழ் வாழ்க! வள்ளுவம் வாழ்க! என்னும் ஒலிகள், திருக்குறள் பாடல் ஒலி ஒருபக்கம் என முழக்கங்கள் வானைப் பிளக்கும் வண்ணமும் தமிழ்நாடு எழுச்சியுறப் பாடும் பள்ளி எழுச்சியாகவும் இருந்தன. அத்துடன் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கும் வகையில் வாணவேடிக்கை, சிலம்பாட்டம், கழியல் ஆட்டம், வாள் வீச்சு, மற்போர், தரை விளையாட்டு இன்னபிற காட்சிகள் இளைஞருலகை எழுச்சிபெறச் செய்யும் காட்சிகளாயிருந்தன.

இங்ஙனம் மூன்றுமணி நேரம் கழிவது தெரியாக் காட்சியாக நடைபோட்டுவந்த ஊர்வலம் ஒப்பனை செய்யப்பட்டிருந்த சிலை திறப்பு விழா மேடையை அணுகிற்று.

### சிலை திறப்பு

ஊர்வலம் சிறுத்தொண்ட நல்லூர்—ஏரல் வள்ளுவர் கோட்டத்தை வந்தடைந்ததும் தமிழ் மன்றத் தலைவர் திரு. ச. சிவசங்கு அவர்கள் கேட்டுக்கொள்ள முனைவர் க. ப. அறவாணன் அவர்கள் தலைமை ஏற்றுச் சிலை அமைத்தவர்களைப் பாராட்டியும், வள்ளுவர் நெறியை வாழ்நாள் முழுமையும் அனைவரும் கடைப்பிடிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு அரிய தலைமை உரையாற்றினார்.

மன்றச் செயலர் புலவர் க. அய்யாத்துரை அவர்கள் அனைவரையும் வரவேற்று, கொற்கைத் தமிழ் மன்றம் வள்ளுவர் சிலையினைத் திறந்து வைக்கும் நோக்கத்தினை விளக்கிப் பேசினார்.

அடுத்து வள்ளுவர் சிலையைத் திறந்து வைத்துப் பேசிய பாவலரேறு பெருஞ்சித்திரனாரவர்கள், உரையாற்றுகையில்,

"தமிழ் மன்றத்தாரின் இந்த முயற்சியை நான் பாராட்டு கிறேன். நாம் ஈராயிரம் ஆண்டுகளாக வெறும் பாராட்டுரைகளும், பட்டி மண்டபமும், வழக்காடு மன்றமுமே நடத்தி வந்தோமே யொழிய வள்ளுவர் கருத்தை வாழ்வில் கடைப்பிடித்தோமில்லை. ஒழுக்கம், வாய்மை, அன்பு, அருள் ஆகியவற்றை மறந்து அழுக்காறு அவா இன்னுச்சொல் ஆகியவற்றையே மேற்கொண் டோம். கோழைகளானேம், அஞ்சாமை, தறுகண்மை ஆகியன வற்றை விலக்கிவிட்டு வாயளவில் வள்ளுவரைப் புகழ்ந்து செய லாற்றலில் கேடுகளைச் செய்தோம். இந் நிலையில் தமிழினம் எப்படி முன்னேறும்?" என்ருர்.

அடுத்துத் தமிழூர் அருளி, தாமரை அம்மையார், ஆகியோர் வள்ளுவத்தின் சிறப்பினைக் குறித்து உரையாற்றினர். அருள் தந்தை நவமணி அடிகள் $7\frac{1}{2}$ கிராம் பொன் சங்கிலியொன்றை நன் கொடையாக வழங்கினுர். வள்ளுவர் சிலையைச் சுற்றிப் பூங்கா அமைக்கப் பத்தாயிரம் ரூபாயாவது தேவை எனவும், அதனைப் பொது மக்கள் வழங்கி உதவ வேண்டுமெனவும் குறிப்பிட்டார்.

இவை அனைத்துக்கும் மேலாக யாழ்ப்பாணம் விடுதலைப் புலிகள் குழுத் தலைவர் திரு. முகுந்தன் அவர்கள் சிலை அமைத்தோரைப் பாராட்டிப் பேசுகையில், "இங்கு நீங்கள் வள்ளுவர் சிலையைத் திறக்கிறீர்கள்; இலங்கையில் வள்ளுவர் சிலையை உடைக்கிருர்கள். நீங்கள் சிலை திறந்தது எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது. நீங்களெல் லாம் தக்க ஆதரவு அளித்தால் ஈழம் தனித்தமிழ் நாடு ஆவதற்கு அதிக நாள் ஆகாது" என்றும் உணர்ச்சியோடு குறிப்பிட்டார்.

தமிழ்த்தாய் வாழ்த்து, வள்ளுவர் வாழ்த்துடன் விழா இனிது நிறைவுற்றது. இவ் விழாவினையொட்டிக் குறள் அரங்கேற்றம், குமண வள்ளல் ஆகிய நாடகங்களும், ஔவையார்பற்றிய வில்லிசை நிகழ்ச்சியும் நடைபெற்றன.

---

## வள்ளுவரை வாழ்த்திடுவோம்!

[நாகை. வேலன்]

கல்லாமைக் களையெடுத்துக் கல்வியெனும் வித்திட்டு
பல்லான்ற கேள்வி பயன்விளையக் கண்டபின்னர்
பொல்லாத பகைகடிந்து புல்லறிவைச் சுட்டெரித்து
வல்லாங்கு வாழாமல் எல்லார்க்கும் ஈத்துவந்து
சொல்லாலும் செயலாலும் சுற்றத்தார் போற்றும்வண்ணம்
இல்லாண்மை என்பதொரு நல்லாண்மை மேற்கொண்டு
எல்லார்க்கும் நல்லவராய் ஏற்றகுடிப் பிறப்பினராய்
வாழும்வகை சொன்னதிரு வள்ளுவரை வாழ்த்திடுவோம்.

## டாக்டர் பட்டம் பெற்ற முதல் பள்ளி ஆசிரியர்

சென்னை, முத்தியாலுப்பேட்டை மேல்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் புலவர் திரு. ஆ. கந்தசாமி, பணியிலிருந்துகொண்டே இடைவிடாத முயற்சியுடன் எஸ். எஸ். எல். சி., பி. ஏ., பி. எட்., எம். ஏ., ஆகியவற்றை முடித்தார். இவர் பள்ளியில் ஊதியமில்லா விடுப்பு எடுத்து, சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையில் எம். ஃபில். பட்டம் பெற்றார். விடாமுயற்சியுடன் தொடர்ந்து உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் மேற்பார்வையில் டாக்டர் (பிஎச். டி.) பட்ட ஆய்வு செய்து, 'குமரகுருபரர் கற்பனை' என்னும் ஆய்வேட்டிற்காக அண்மையில் 'டாக்டர்' பட்டம் பெற்றார். இவர்தாம் முதன்முதலாகப் பள்ளி ஆசிரியர் நிலையிலிருந்துகொண்டே 'டாக்டர்' பட்டம் பெற்றவர். 44 வயதே நிரம்பிய இவர் 24 ஆண்டுகளாகத் தமிழ் கற்பிக்கும் பணியில் இருந்து வருகிறார். சைவப் பெரியார் சச்சிதானந்தம் பிள்ளையின் நெருங்கிய உறவினரான இவர் இருபதுக்கும் மேற்பட்ட ஓரங்க நாடகங்களையும், 'நீர்க்குமிழி', 'கவரிமான்', 'கரும்பு' போன்ற முழுநேர நாடகங்களையும் எழுதி மாணவர்களைக் கொண்டே நடத்தியிருக்கின்றார். ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டிலும், இலங்கையில் நடைபெற்ற உலக இந்து சமய மாநாட்டிலும் இவர் ஆய்வுக் கட்டுரைகள் படித்துள்ளார். கழக ஆட்சியாளர் 'ஐயா' அவர்களிடம் பேரீடுபாடுகொண்ட இவர்தம் வளர்ச்சிக்கு மறைமலையடிகள் நூலகம் பெரிதும் பயன்பட்டமையை நன்றியுடன் நினைவு கூர்கின்றார்.



---

## இ. பகவதி பெருமாள் பிள்ளை சிவனடி சேர்ந்தார்கள்

செல்லம்மாள் மகளிர் கல்லூரிப் பேராசிரியர் தாயம்மாள் அறவாணன் அவர்களின் தந்தையாரும், இலயோலாக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் திரு க. ப. அறவாணன் அவர்களின் மாமனாரும், திருவாவடுதுறை ஆதீனத் தமிழ் வித்துவானும், சித்தாந்த ஆசான் என்ற பட்டம் பெற்றவரும், ஓய்வுபெற்ற தலைமையாசிரியருமான, வித்துவான் இ. பகவதி பெருமாள் பிள்ளை அவர்கள், தம் 82ஆவது அகவையில், 5—7—1984இல் சிவனடி சேர்ந்தார்கள்.

பணியாற்றிய காலத்தும், ஓய்வுபெற்ற பின்பும், தமிழுக்கும், சைவத்துக்கும் அயராத் தொண்டாற்றி வந்தார்கள். தமிழ், சமற்கிருதம், மலையாளம், ஆங்கிலம் என நான்கு மொழிகளிலும் புலமை பெற்ற இவர்களிடம், சைவத்தையும், தமிழையும் பாடங்கேட்ட பல்லோர் நெஞ்சம் நெகிழ, அவர்கள் உயிர் நீத்துவிட்டார்கள் என்பதை அறிவிக்க வருந்துவதுடன், அன்னாரை இழந்த குடும்பத்தினருக்கும், நண்பர்களுக்கும் எமது ஆழ்ந்த இரங்குதலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# செய்திகள்

## ''தென்பொதிகைச் செந்தமிழ்'' தொடர் சொற்பொழிவு

திருநெல்வேலித் தனித்தமிழ் இலக்கியக் கழகம் வெள்ளி விழாவையொட்டி இவ்வாண்டு மாதந்தோறும் இரண்டாம் சனிக் கிழமை மாலை ஆறு மணியளவில் பாளையங்கோட்டை அரசினர் சித்த மருத்துவக் கல்லூரியில் ''தென்பொதிகைச் செந்தமிழ்'' என்னும் பொருள் குறித்துத் தொடர் சொற்பொழிவுக்கு ஏற்பாடாகி யுள்ளது. நெல்லை மாவட்டத் தமிழறிஞர் பன்னிருவர்தம் புலமை நலம், தமிழ்த் தொண்டு, சிறப்புக் கூறுகள், பயன்பாடு ஆகியவை பற்றிப் பேராசிரியப் பெருமக்கள் எழுத்துரையும் கலந்துரையாடலும் நிகழும். 14—7—84 அன்று முதற் பொழிவாகச் 'சொற் செல்வர்' சி. சு. மணி அவர்கள் ''குமரகுருபரர்''பற்றிச் சிறப்புரையாற்றினர். கழகத் தலைவர் பேராசிரியர் பா. வளன் அரசு தலைமை தாங்கினர். செயலாளர் பெ. இரா. வெள்ளத்துரை வரவேற்றார். துணைச் செயலாளர் தே. வருக்கீசு நன்றி கூறினர்.

## முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோலப் பிள்ளை அவர்களின் 89ஆம் பிறந்தநாள் விழா

புரசை, சுந்தரர் தமிழ்க் கல்லூரித் தலைவரும் முதுபெரும் புலவருமான மகா வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களின் 89ஆவது பிறந்தநாள் விழா 31—8—84 மாலை, புரசை கங்காதரேசுவரர் கோவில் தெருவிலுள்ள மாநகராட்சி உயர் நிலைப் பள்ளியில், பேராசிரியர், பைந்தமிழ்ப் பாவலர் அ. கி. பரந் தாமனர். எம். ஏ., அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. புலவர் தி. பாலசுப்பிரமணியம் பி. லிட் , அவர்கள் அனைவரையும் வரவேற்று நெடிய உரையாற்றினர். புலவர் அ. சங்கர், எம். ஏ., பி. எட்., வித்துவான் சச்சிதானந்தம் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். வித்துவான் ஆ. பா. வீரராகவன், எம். ஏ., பி. எட். அவர்கள் நன்றியுரை நவில விழா இனிது நிறைவுற்றது.

## குண்டலகேசி—புதுக்காவியம் வெளியீட்டு விழா

கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் இயற்றிய குண்டலகேசி - புதுக்காவிய வெளியீட்டு விழா கோயிற் பட்டி திருவள்ளுவர் மன்றத்தின் சார்பில் 26—8—84 ஞாயிற்றுக் கிழமையன்று கோயிற்பட்டி ஆ. வை. தொடக்கப் பள்ளியில் பேராசிரியர், புலவர் திருமிகு க. திருமாறன் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. நூலின் முதற்படியினை திருமிகு சி. பழ. இராமகிருட்டிணன் அவர்கள் பெற்றுக் கொண்டனர். அருண்மொழி அரசர், பேராசிரியர், திருமிகு. பா. வளன் அரசு அவர்கள் பாராட்டுரை வழங்கினர்.

## திருவள்ளுவர் மன்றப் பதின்மூன்ருவதாண்டு ஆய்வுப் பொழிவு :

கோயிற்பட்டி திருவள்ளுவர் மன்றத்தின் பதின்மூன்ரும் ஆண்டினையொட்டி 26—8—84 ஞாயிற்றுக் கிழமை காலை 9-30 மணி முதல் 11 மணி வரை ஆ. வை. தொடக்கப் பள்ளியில், இலக்கியச் செம்மல், புலவர் மணி திருமிகு இரா. இளங்குமரன் அவர்கள் அரிய ஆய்வுச் சொற்பொழிவொன்றனை ஆற்றினர்.

## இளங்கோ அடிகள் விழாவும் படத் திறப்பும்

18—8—84ஆம் தேதி வாழியூரில் இளங்கோ அடிகள் விழா நடைபெற்றது. இளங்கோ மன்றத் தலைவர் வே. இராசவேலன் அவர்கள் வரவேற்புரையாற்றினர். திருவாளர்கள் இராச. சின்ன குழந்தை, மு. ஏழுமலை, அ. தெய்வசிகாமணி முன்னிலை வகித்தனர். திரு. வெ. சோலைநாதன் தலைமை தாங்கினர். திருவாளர்கள் வேலூர் ம. நாராயணன் இல. அண்ணாமலை வாழ்த்துரை வழங்கினர்கள். திரு. ஞானப்பிரகாசம் இளங்கோ அடிகள் படத்தைத் திறந்து வைத்துப் பேசினர். திருமிகு. சிலம்பொலி செல்லப்பனர் அவர்கள் "*சிலம்பில் சில காட்சிகள்*" பற்றிச் சிறப்புரை ஆற்றினர். சிற்பக் கலைஞர் திரு. க. உமாபதி நன்றி கூற விழா இனிது நிறைவுற்றது.

## தெய்வத் தமிழ் மன்ற முதலாண்டு நிறைவு விழா

சென்னை பழைய வண்ணையம்பதி நல்லதம்பி சேதுராமன் திருமண மண்டபத்தில் 25—8—84இல் தெய்வத் தமிழ் மன்றமும் அரிமா சங்கமும் இணைந்து நடத்தும் இலவச மருத்துவ முகாம் தொடக்கவிழா டாக்டர் சி. நடராசன் எம்.டி. அவர்கள் தலைமையில். நடைபெற்றது. அன்று மாலை தீந்தமிழ் வளர்த்த தெய்வச் சான்றோர் கவியரங்கம், திரு. இல. பொ. பொன்னுசாமி, இ. ஆ. ப. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சிலம்பொலி செல்லப்பனர் தொடக்கவுரை ஆற்றினர். கவிஞர் பெருமக்கள் பலர் கவிதை வடித்தனர். 26—8—84இல் தேவார இசை அரங்கும், சிறப்பு விழாவும் நடைபெற்றன.

## குழந்தை இலக்கிய ஆய்வுக்கு டாக்டர் பட்டம்

சென்னை இராணிமேரி கல்லூரி துணைத் தமிழ்ப் பேராசிரியை திருமதி அம்புயம் யுவச் சந்திரா அவர்கள் தமிழ்க் குழந்தை இலக்கியத்தில் ஆய்வு நிகழ்த்தி முதன் முறையாகச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். 22-6-84இல் நடந்த சென்னைப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் இப் பட்டம் வழங்கப்பெற்றது.

குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களின் சிறுவர்க்கான கவிதைகள், கதைகள், புதினங்கள், வாழ்க்கை வரலாறுகள் ஆகிய பல்வேறு துறைகளைச் சேர்ந்த 50க்கு மேற்பட்ட நூல்களை ஆய்வுசெய்து இப் பட்டத்தைப் பெற்றுள்ளார்.

## அனைத்துலகத் திராவிட மொழியியல் கருத்தரங்கு

புதுவையில் அமைந்துள்ள திராவிட மொழியியல் அனைத்துலகத் திராவிட மொழியியல் கழக மையத்தின் சார்பில் கலவைக் கல்லூரியில் 17—8—84 மாலை மதுரை அமெரிக்கன் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர் முனைவர் கு. பரமசிவம் அவர்கள் “தமிழில் வேற்றுமை - ஒரு புதிய பார்வை” என்னும் பொருள்பற்றி உரை நிகழ்த்தினார்.

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(சிலம்பு ருஅ, ருக௦ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் (கழக ஆட்சியர்) | 10 | 00 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 | 00 |
| திரு. சு. கணபதி—லோகசுந்தரி, திருமண நன்கொடை (கழக மேலாளர் ஆ. சு. அவர்கள் மகன்) | 11 | 00 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 | 00 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 | 00 |
| திருமுருக விசாக நம்பி அவர்கள் | 5 | 00 |
| சூரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் | 5 | 00 |
| கல்லை தே. கண்ணன் அவர்கள் (ஆசிரியர் வள்ளுவர்வழி) | 5 | 00 |

---

# மதிப்புரை

## தமிழரின் தாயகம்

[ஆசிரியர்: டாக்டர் க. ப. அறவாணன், M. A , M. Litt Ph.D. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், டி. டி. டி. ஐ., தரமணி சென்னை-600 113, பக்கங்கள் 150 விலை: உரு. 10-00.]

முனைவர் அறவாணன் அவர்கள், முனைவர், ம. பொ. சி. அறக்கட்டளை வழி நிகழ்த்திய சொற்பொழிவே இந் நூல். தமிழரின் தாயகம் எது என்பதுபற்றி ஆராய்ச்சியாளர்கள் பல்வேறு கருத்துகளை வழங்கி வருகின்றனர். அக் கருத்துகளையும், கடல் கோளால் அழிந்த குமரிக்கண்டமே தமிழினத்தின் தோற்ற நிலப்பகுதி என்று பாவாணர் போன்றோர் கூறுங்கருத்துகளையும் எடுத்துக்காட்டித் தமிழினத்தின் தோற்ற வரலாற்றினைத் தெளிவுபடுத்துகிறார் இந் நூலாசிரியர். மேலும் மனித வரலாற்று நூல் (Antropilogy) எனப்படும் நூலில் தமிழின வரலாறு எத்தகையது என்பதை எடுத்துக் காட்டுகிறது இந்நூல். தமிழ் - தமிழர் என்ற பெயர்க் காரண ஆய்வில் தொடங்கி தமிழரின் தாயகம்பற்றிய பல்வேறு கொள்கைகள், சிந்துவெளி நாகரிகம், பண்டைத் தமிழ் மன்னரின் ஆட்சி முறை, திராவிட இனப் பாகுபாடுகள், தமிழினம் உலகெங்கும்

பரவிய வரலாறு இன்னபிற செய்திகளைத் தக்க ஆதாரங்களோடு விளக்குகிறார். சுருங்கச் சொல்ல வேண்டுமானால் தமிழின வரலாற்றுக்கு இஃதோர் அடிப்படை வரலாறு எனலாம். ஆராய்ச்சி யாளர்கள் படித்தறிய வேண்டிய செய்திகள் நிரம்ப உள்ளன.

## வழிகாட்டும் இலக்கியங்கள்

[ஆக்கியோன்: வெ. சுப்பு, முன்னேற்றப் பதிப்பகம், 21. மாட்லி சாலை, சென்னை-17, விலை: உரு. 7-00.]

வீரர்கள் எனப்படுவோர் வரலாற்றில் இடம் பெறலாம். ஆனால் அவரெல்லாம் மக்களின் நல்வாழ்விற்கு வழிகாட்டிகள் ஆக மாட்டார். அதே நேரத்தில் ஒரு சாக்ரடீசு, ஒரு வள்ளுவர், ஒரு வள்ளலார், ஓர் ஔவையார் போன்றவர்களும் சங்க காலப் புலவர் களும் மக்களுக்கு வழிகாட்டிகளாக இருந்து, தமது பேச்சாலும் எழுத்தாலும் ஆற்றிய நற்பணிகள் அளப்பில. அத்தகையோர் இந் நாளில் தோன்றாமையினால்தான் எப்பக்கம் நோக்கினும் குத்தும் வெட்டும், கொலைகளும் குண்டு வீச்சுகளும் என்ற அவலநிலை காணப்படுகின்றது.

இத்தகைய நிலைமைகளைச் சுட்டிக்காட்டி நம் தமிழ் இலக் கியங்கள் குறிப்பாக வள்ளுவர், வள்ளலார், பாரதியார் ஆகியோரின் படைப்புகள் குமுகாயத்தைச் சீர்திருத்தி வாழவைக்க எங்ஙன மெல்லாம் வழிகாட்டியுள்ளன என்பதை விளக்குவதே "வழிகாட்டும் இலக்கியங்கள்" என்னும் இந் நூல்.

## இதயப் பூக்கள்

[பதிப்பாசிரியர்: கவிஞர் உலகநாத பல்லவன், எம்.ஏ., முத்தமிழ் இலக்கிய மன்றம், அம்மையப்பட்டு, வந்தவாசி, 604408, விலை: உரு. 7-00.]

கவிஞர்கள் பதினைந்து பேர்களின் கவிதைத் தொகுப்பே இந் நூல். கவிதைகள் அனைத்தினூடேயும் தமிழ்ப்பற்றும், முற்போக்குக் கருத்துகளும், சீர்திருத்த ஆர்வமும் இழையோடிக்கொண்டிருக் கின்ற தொகுப்பாசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

## பெருநாவலர் பாரதி பிள்ளைத் தமிழ்

[ஆக்கியோன்: டாக்டர் தேவராசன், எம். பி. பி. எசு. (மருத்து வர் மறையரசன்) வளர்தமிழ்ப் பதிப்பகம், நீடா மங்கலம் (தஞ்சை மாவட்டம்) 614404, விலை: உரு. 4-50.]

இந் நூலாசிரியர் ஒரு மருத்துவராக மட்டுமன்றிக் குமுகாயத் தின் குறைபாடுகளைக் களையவந்த பாரதியாரின் புகழைப் பாடித் தமது கவிதையாற்றலைப் புலப்படுத்துகிறார். பிள்ளைத் தமிழ் இலக்கணம் மாறாவகையில் பாரதியார் பிள்ளைத் தமிழைக் கற்பனை வளம், பொருட்செறிவு, இனிமை, எளிமை, இத்தனையும் கூட்டி இனிய கவிதைகளை ஆக்கியுள்ளார் மருத்துவர் மறையரசன்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை-108. அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.